# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 08.03.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



ஓய்வெடுங்கள் கலைஞரே!
- தமிழருவி மணியன்



ஆஸ்கர் ரோஜா
- பாலசந்தர் புகழாரம்

வெண்ணிலாவின் ஃபேவரிட் டிஷ்!

# DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL



Dr. T.G. Govindarajan
President - Founder -
Medical Director

தமிழகத்தில் இதுவே முதல் முறை

## டாக்டர் காமாட்சி நினைவு மருத்துவமனை

## கேன்சர் இன்ஸ்டிடியூட் (WIA) – உடன்

இணைந்து பெருமையுடன் அறிமுகம் செய்துள்ளது

## தமிழ்நாட்டின் முதல் PET-CT



**Discovery VCT64 SLICE PET-CT SCAN**
**Installed at CANCER INSTITUTE (WIA)**
Canal Bank Road Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : **93814 36899**
**93814 36896**

10% Special
Discount On Sunday
for Master & Executive
Health Check-up

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* கேன்சரை அறிகிறது. * கேன்சர் பரவியுள்ள மற்றும் முற்றியுள்ள நிலவரத்தை அறிகிறது. * கேன்சர் சிகிச்சைகான மருத்துவ திட்டமிடலுக்கு உதவுகிறது. * சிகிச்சைக்குபின் கேன்சர் மீண்டும் தோன்றுவதை அறிகிறது. * இதய தசைகளுக்கான இரத்த ஓட்டத்தை அறிகிறது. * மாரடைப்பு இதயத் தசைகளின் மீது ஏற்படுத்தியுள்ள தாக்கத்தின் விளைவுகளை அறிகிறது. * ஆஞ்சியோபிளாஸ்டி மற்றும் கரோனரி ஆர்டெரி பைபாஸ் சர்ஜரிகளின் மூலம் குணப்படுத்த இயலும் இதயத்தின் தசைப்பகுதிகளை அறிகிறது. (மையோ கார்டியல் பெரிஃபியூசன் ஸ்கேன் உதவியுடன்). * மனக்குழப்பம், நினைவிழத்தல், டியூமர் முதலான மூளையின் சீரற்ற தன்மையைக் கணிப்பதுடன் மத்திய நரம்புத் தொகுப்பில் உள்ள பாதிப்புகளையும் அறிகிறது. * நோயாளியின் மூளை மற்றும் இதயத்தின் செயல்பாடுகளை இயல்பான மனிதனோடு ஒப்பிட்டு பார்க்க உதவுகிறது.

## DR. KAMAKSHI MEMORIAL HOSPITAL - SPECIALITIES AT A GLANCE

• Intensive Care Unit Cardiology & Cardio Thoracic Surgery • Neurology & Neuro Surgery • Trauma Care & Orthopaedics • Obstetrics & Gynaecology • ENT Surgery • Dermato Cosmetology • Pulmonology • Dentistry and Oral & Maxillofacial Surgery • Paediatrics • Gastroenterology • Transplant Surgery • Oncology • Transfusion Medicine • Nephrology • Urology • Vascular Surgery

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷிணி – 93451 20265, 93810 30712



**#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.**
**Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282**
**E-mail : info@drkamakshimemorialhospital.org**
**Website : www.drkamakshimemorialhospital.org**

# கல்கி

08-03-2009

4

ஓய்வெடுங்கள் கலைஞரே!

- தமிழருவி மணியன்

24

"யாருக்கும் எதிரியல்ல"

- சிதம்பரம் தீட்சிதர்கள்

50

வெண்ணிலாவின் ஃபேவரிட் டிஷ்!

8

# ஆஸ்கர் ரோஜா!

- பாலசந்தர் புகழாரம்

கலக்க வருது கல்கி

கோவை மாவட்ட வாசகர்களுக்கு நடுப் பக்கத்தில் கூப்பன்!

**ஸ்**கேனைப் பற்றிய விவரங்களை டாக்டர் வனிதா விலாவாரியாக விளக்கிவிட்டார். நோயாளிகளுக்குப் பயனுள்ள கட்டுரை.

**- ஜே.துரைராஜ், சென்னை - 116**

'**வ**ரியின்றி வருத்தும் பட்ஜெட்' தலையங்கம் படித்தேன். ஒரு சாரார் கண்மூடித்தனமாக ஆதரிப்பார்கள். ஒரு சாரார் 'உப்புமில்லை, சப்புமில்லை' என மொட்டையாகக் கூறி கண்மூடித்தனமாக எதிர்ப்பார்கள். ஆனால், கல்கி நிறைகளைப் பாராட்டியும், குறைகளைச் சுட்டிக்காட்டியுமிருப்பது வரவேற்கத்தக்கது. தெளிவான விமர்சனம்.

**- எஸ். ராமசாமி, குட்டைதயிர்பாளையம்**

'**ஸோ**லோ வாசிக்க வேண்டுமென்றால் தனித்தன்மை உருவாகணும்' என்ற முதுபெரும் கர்நாடக வயலின் இசை மேதை டி.என்.கிருஷ்ணனின் ஆரோக்கியமான அறிவுரை, வளரும் கலைஞர்களுக்கு அயர்ன் டானிக்!

**- எஸ். முரளி, ஸ்ரீரங்கம்**

'**சி**வா மனசுல சக்தி' பட விமர்சனம் பத்திரிகையுலகில் புதிய யுக்தி. அதற்காக ஒரு முழுப் பக்கம் ஒதுக்கியிருப்பது ஜாஸ்தி சார்!

**- மு. மதிவாணன், அரூர்**

'**ந**டிப்பை நடிப்புக்காக மட்டுமே செய்ய ஆசைப்படுகிறேன்' என்று சொல்லும் ஸ்வேதா உண்மையிலேயே வித்தியாசமான மல்லிதான்.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**சை**தன்யாவின் ஹைக்கூ கணங்கள், காலேஜ் கேம்பஸைச் சுற்றி வந்த தருணங்களை நினைவூட்டின!

**- சு.இந்துமதி, நெய்வேலி**

'**ப**ட்ஜெட் பரபர' படிக்க பரபரப்பாகவும் விறுவிறுப்பாகவும் இருந்தது.

**- சாந்தா ராஜாமணி, சென்னை - 88**



# பத்திரிகை உலகில் புதிய யுக்தி!

சமீபத்தில் சென்னை உயர்நீதிமன்ற வளாகத்தில் நடைபெற்ற நிகழ்வுகளைத் தொடர்ந்து, நீதிமன்ற வளாகத்தில் நுழைபவர்களின் (வழக்கறிஞர்கள் உட்பட) அடையாளம் உறுதி செய்யப்படுகிறதா என்ற கேள்வி எழுந்துள்ளது. வழக்கறிஞர்கள் தம் கட்சிக்காரர்களுக்கு உரிய அடையாள அட்டை வழங்கலாம். இதன்மூலம் தொடர்பில்லாதோர் நீதிமன்ற வளாகத்துள் நுழைவதைத் தடுக்கலாம். இந்த நடைமுறை இருந்திருந்தால், சமீபத்தில் நாடு முழுவதும் தொலைக்காட்சிகள் ஒளிபரப்பி, அதிர்ச்சி அலைகளை ஏற்படுத்திய சம்பவங்களைத் தடுத்திருக்கலாம்.

இப்போது அதுபோன்ற நடைமுறையைத் துவங்குவதற்கான சூழலும், தேவையும் தமிழகத்தில் அமைந்துவிட்டன.

இதனிடையே, தம் அரசைக் கவிழ்க்க நடைபெறும் சதி என்று இந்நிகழ்வு குறித்து முதல்வர் குறிப்பிட்டுள்ளார். இதன்மூலம் யாரை நாம் சதிகாரர்களாக அடையாளம் கண்டு கொள்ள வேண்டும் என்று அவர் விரும்புகிறார்?

**- கே. வேதமூர்த்தி, அடையாறு**

'அமரர் கல்கியின் கல்விச் சிந்தனைகள்' கட்டுரை நூல் குறித்து தமிழச்சி தங்கபாண்டியனின் கருத்தும், எண்ணமும், விமர்சனமும், 'கல்கி'யின் தொலைநோக்கு அறிவை அறிய வைத்தன. சிறப்பான திறனாய்வு, பாராட்டுகள்!

**- என்.சண்முகம், திருவண்ணாமலை**

'அருள்வாக்கு' பகுதியில் 'அகமும் புறமும்' என்ற தலைப்பில் வெளியே உள்ள எல்லா ஆனந்தமும், நம்முள்ளேயே அடக்கம் என்ற காஞ்சிப் பெரியவரின் கருத்து மிக மேலானது.

**- டி.வி.ராமமூர்த்தி, சோழிங்கநல்லூர்**







# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர் : **கதிர்பாரதி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் : **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

**சந்தா விவரம் - உள்நாடு :**
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**

வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# ஒய்வெடுங்கள்

மூத்த காங்கிரஸ் பிரமுகரான தமிழருவி மணியன் இலங்கைப் பிரச்னையில் கட்சி நடந்து கொள்ளும் முறையைப் பார்த்து வெறுத்துப் போய் அதிலிருந்து விலகியிருக்கிறார். "இப்போதுதான் மனப் புழுக்கத்திலிருந்து விடுபட்டு சுதந்திரமாக கருத்துக்களைச் சொல்லக் கூடிய நிலைக்கு வந்திருக்கிறேன்" என்கிறார்.

**காங்கிரஸுக்கு என்ன ஆச்சு?**

தன்னலமற்ற அரசியல் துறவி காமராஜரின் பக்கம் நிற்க வேண்டும் என்ற ஆசையில், 1966-67ல் மாணவனாக இருக்கும்போது அரசியலில் குதித்தவன் நான். அவர் மறைந்த பிறகு இந்திரா காந்தியை என் இதயம் ஏற்காததால், சில காலம் ஜனதாவில் இருந்தேன். காகித நியமனங்களின் மூலம் கட்சியை நடத்தி, காந்தியப் பண்புகளை முற்றிலும் காங்கிரஸ் புறக்கணிப்பதற்கான சூழலை உருவாக்கியவர் இந்திரா. அவரது மறைவுக்குப் பின் 'காமராஜர் ஆட்சியை உருவாக்குவோம்' என்ற மூப்பனாருடன் இணைந்து பணியாற்றி, அவரது மறைவுக்குப் பின்னர் காங்கிரஸில் மீண்டும் இணைந்தேன். உண்மையைச் சொல்லப் போனால் காமராஜர் மறைவுக்குப் பின்னரே, தமிழகத்தில் காங்கிரஸ் மக்கள் இயக்கமாக இல்லாமல் சில குறிப்பிட்ட மனிதர்களுக்கு சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர் பதவிகளைப் பெற்றுத் தருவதற்காக, திராவிட இயக்கங்களுடன் பேரம் பேசும் தரகு நிறுவனமாக தன்னைத் தாழ்த்திக்கொண்டது. இன உணர்வும், மொழிப்பற்றும், மக்கள் நலனில் நாட்டமும் இல்லாமல், தனிநபர் துதிபாடுவதும், டெல்லி தலைமைக்கு காவடி தூக்குவதும், காமராஜர் தொண்டனான என்னை மனப்புழுக்கத்தில் ஆழ்த்தியது. இந்த முறை காங்கிரஸ் பாராளுமன்றத் தேர்தலில் தோற்கடிக்கப்பட வேண்டும். ஆத்ம பரிசோதனைக்கு இந்தத் தோல்வி தேவைப்படுகிறது.

**மாநில அரசின் அதிகார எல்லைக்குட்பட்ட ஒரு பிரச்னையில், தீர்வு காணும் நிலையில் இருக்கும் முதல்வர் உண்ணாவிரதம் இருப்பதாகச் சொல்வது எந்த வகையிலும் ஏற்புடையது அல்ல.**



# கலைஞரே!

## - தமிழருவி மணியன்



* ஓய்வும் பொறுப்பும்...

அதே நேரத்தில் கட்சி உயிரோடு இருக்க வேண்டும். காரணம் இந்திய ஒருமைப்பாடு, மதச் சார்பின்மை ஆகிய இரண்டும் சேதமில்லாமல் இருக்க, காங்கிரஸ் இருக்க வேண்டும்.

### முரண்பாடு

இலங்கையில் நம் இன மக்கள் கரிக்கட்டைகளாக கொன்று குவிக்கப்படும்போது, இன்று வரை சோனியா காந்தி அங்குள்ள மக்களின் துயரநிலை குறித்தோ, அதற்கான அரசியல் தீர்வு குறித்தோ ஒரு வார்த்தையும் சொல்லவில்லை.

புலிகளைக் காரணம் காட்டி ஈழப் பிரச்னையிலிருந்து விலகி நிற்பது எந்த வகையிலும் நியாயமாகத் தெரியவில்லை. நான் அடிப்படையில் காந்தியவாதி. ஆயுதம் ஏந்தும் அணுகுமுறையில் எனக்கு உடன்பாடு இல்லை. அவர்களின் வன்முறை நடவடிக்கைகளை ஆதரிக்க முடியாது. ஆனால், இன்று இலங்கை ராணுவம் புலிகளை அழிக்கிறோம் என்ற போர்வையில் ஓர் இனத்தையே அழித்துக் கொண்டிருக்கிறது. இதை நிறுத்த வேண்டிய தார்மிகக் கடமை இந்தியாவுக்கு இருக்கிறது. சோனியா வழிகாட்டுதலில் நடப்பதாக பிரதமர் மன்மோகன் சிங்கும் முதல்வர் கலைஞரும் அடிக்கடி சொல்கிறார்கள். அப்படியானால் இலங்கை ராணுவத்தின் படுபாதகச் செயல்களுக்கு மத்திய மாநில அரசுகள் மறைமுக ஆதரவு வழங்கி வருகின்றனவா என்ற கேள்வி எழுகிறது. இதற்கான பதிலை, வரும் நாடாளுமன்றத் தேர்தலில் தமிழக மக்கள் வழங்குவார்கள்.

### தீர்வுதான் என்ன?

புலிகள் முதலில் ஆயுதங்களைக் கீழே போட வேண்டும் என்கிறார் சிதம்பரம். ஓடுபவன் நிற்க வேண்டுமானால் துரத்துபவன் முதலில் நிற்க வேண்டும். புலிகள் ஓடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஆயுதங்களைக் கீழே போட்டால் துரத்துபவனின் கையில் பிடிபட்டுச் சாவார்கள். இந்த அடிப்படை நியாயத்தைப் புரிந்து

கொண்டு, இந்தியா உடனடியாக போர் நிறுத்தத்துக்கு வழிகாண வேண்டும். பிறகு வடக்கு கிழக்கு மாநிலங்களுக்கு இந்தியாவில் இருக்கும் மாநிலங்களைப் போல உரிமைகளைப் பெற்றுத் தரவேண்டும். சிங்களம் மட்டுமே ஆட்சி மொழி, பௌத்தம் மட்டுமே அரசு மதம், சிங்களர்கள் மட்டுமே ஆளப் பிறந்தவர்கள் என்ற நிலை மாறாமல் போனால், தமிழீழம் காண இந்தியா உட்பட உலக நாடுகள் உதவ வேண்டும். இதுதான் இறுதிகட்டத் தீர்வாக இருக்க முடியும்.

### காங்கிரஸைக் கைகழுவுங்கள்

காங்கிரஸைக் கை கழுவாமல் கலைஞர் தேர்தலைச் சந்தித்தால் மிக மோசமான தோல்வியைச் சந்திக்கக் கூடும். ஈழப்பிரச்னை, இனப் போராட்டமாகவே தமிழகத்தில் பார்க்கப்படுகிறது. அதைச் சிறுமைப்படுத்தினால் காங்கிரஸும் கலைஞரும் பெரிய விலை கொடுக்க வேண்டியிருக்கும். தனது ஆட்சி கவிழ்ந்தாலும் பரவாயில்லை என்று காங்கிரஸைக் கைகழுவி, பா.ம.க., ம.தி.மு.க., விடுதலைச் சிறுத்தைகள் ஆகியோருடன் இணைந்து தேர்தலைச் சந்திக்கவேண்டும். ஏனென்றால் ஈழப் பிரச்னை காரணமாக காங்கிரஸ் மீது அந்த அளவுக்கு மக்கள் எதிர்ப்பு ஒரு கொதி நிலையாக இருக்கிறது.

**இந்த முறை காங்கிரஸ் பாராளுமன்றத் தேர்தலில் தோற்கடிக்கப்பட வேண்டும். ஆத்ம பரிசோதனைக்கு இந்தத் தோல்வி தேவைப்படுகிறது.**

### தி.மு.க. மீது வெறுப்பு?

ஜெயலலிதா, தி.மு.க. கூட்டணியிலிருந்து காங்கிரஸைப் பிரிக்கவேண்டும் என்பதற்காக, 'தி.மு.க.வுடன் இணைந்து தேர்தலைச் சந்தித்தால் காங்கிரஸ் தோற்கும்' என்று சொல்கிறார். ஆனால், கலைஞர் கடந்த இரண்டரை ஆண்டுகளாக தமிழகத்தில் செயல்படுத்தி இருக்கிற திட்டங்கள் இருகரம் நீட்டி வரவேற்கப்படக் கூடியவை. அடித்தட்டு மக்களைப் பாதுகாக்கும் நோக்கோடு தி.மு.க. நடக்கிறது. இருந்தும் தி.மு.க.வின் அளவுக்கு மீறிய ஆடம்பரம், விளம்பர வெளிச்சம், கலைஞர் குடும்பத்தின் எல்லை மீறிய ஆதிக்கம் ஆகியவை சாதனைகளை மீறி எதிர்விளைவுகளை உருவாக்கி இருக்கின்றன. செய்த சாதனைகளின் அடிப்படையில், நான் சொன்ன கூட்டணியோடு நின்றால் பெரிய வெற்றி கிடைக்கும். காங்கிரஸ் சகவாசம் தி.மு.க.வைக் குழியில் தள்ளிவிடும். ஈழத் தமிழருக்கு எதிரான நிலைப்பாட்டுடன் செயல்படும் காங்கிரஸோடு கலைஞர் சமரசம் செய்துகொள்வது, எந்த வகையிலும் அவருக்குப் பெருமை சேர்க்காது. ஆனால், பதவி நாற்காலிக்காக கலைஞர் சோனியா காந்தியிடம் தன்னிலை தாழ்ந்து நிற்பது தமிழினத்தால் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்று.


* துயரம் புரியாத தலைவி

**கலைஞரே ஓய்வெடுங்கள்!**

தி.மு.க.வின் சுவாசக் காற்று கலைஞர். தி.மு.க.வைக் காப்பதற்காகவும், ஆட்சியைக் கட்டுக்கோப்பாக வைத்திருக்கவும் அவர் கடும்பணி ஆற்ற வேண்டிய கட்டாயம். கலைஞருக்குப் பிடித்த உலகத் தலைவர் ஃபிடல் காஸ்ட்ரோ உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டபோது, அவர் தம்பியிடம் பொறுப்பை ஒப்படைத்தார். கலைஞரும் வேறு ஒருவரை நம்பாத சூழலில் ஸ்டாலினை முதல்வராக்கலாமே! தன் உடல்நிலையைச் சீர் செய்து, வேண்டிய ஓய்வு பெற்று ஆலோசனை வழங்கி, வழிகாட்டலாம். இதில் ஏதாவது சிக்கல் இருக்குமானால், ஸ்டாலினுக்கு துணை முதல்வர் பதவி கொடுத்து, பணிச் சுமையைக் குறைத்துக் கொள்ளலாம். இந்த இரண்டில் ஏதாவது ஒன்றை அவர் செய்து முழு ஆரோக்கியத்தோடு நூறு ஆண்டுகள் வாழட்டும்.



★ ஓட்டமும் தீர்வும்...

**உண்ணாவிரதம் ஏற்க முடியாது**

பதினெட்டு முறை உண்ணாவிரதம் இருந்த மகாத்மா, தனது கோரிக்கைகள் நிறைவேறும் வரை உண்ணாவிரதத்தை முடித்ததில்லை. அறுவை சிகிச்சை செய்து கொண்டிருக்கும் முதல்வர்; ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர், உண்ணாவிரதம் இருப்பதாகச் சொல்வது ஏற்க முடியாத ஒன்று. மத்திய அரசு தமிழகத்துக்கு நியாயமாக நடக்காவிட்டாலோ, அல்லது அண்டை மாநிலங்கள் தமிழகத்துக்கு துரோகம் செய்தாலோ, எதிர்ப்பைத் தெரிவிக்க ஆள்பவர்கள் உண்ணாவிரதம் இருக்கலாம். ஆனால், மாநில அரசின் அதிகார எல்லைக்குட்பட்ட ஒரு பிரச்னையில், தீர்வு காணும் நிலையில் இருக்கும் முதல்வர் உண்ணாவிரதம் இருப்பதாகச் சொல்வது எந்த வகையிலும் ஏற்புடையது அல்ல.

**போதுமடா சாமி!**

கடந்த நாற்பது ஆண்டுகளாக நேர்மையாக நடைபோட்டவன் நான். ஆனால் இன்று அரசியலை பணம்தான் தீர்மானிக்கிறது. நூறு சதவிகிதம் உண்மையும், நேர்மையும், கொள்கைப் பற்றும் கொண்ட கட்சிகள் இன்றைக்கு இல்லை. எனவே இனி என் வாழ்வின் கடைசி நாள் வரை எந்தக் கட்சியிலும் என்னை இணைத்துக் கொள்வதாக இல்லை. எழுத்து, பேச்சின் மூலம், அரசியலுக்கு அப்பால், மக்கள் பிரச்னைகளுக்காக முனைப்புடன் போராடுவது என்று முடிவு செய்திருக்கிறேன். திட்டக் கமிஷன் உறுப்பினராக என்னை நியமித்தார் கலைஞர். அவருடைய விருப்பத்தையும் மீறி, சுயேச்சையாகச் செயல்பட வசதியாக, திட்டக் கமிஷனிலிருந்தும் விலகி விட்டேன்.

**- ப்ரியன்**

# ஆஸ்கர் ரோஜா!


● பார்த்திபன்

"ஆஸ்கர் விருது வழங்கும் விழா நடந்த அரங்கில் அதிரும் கைத்தட்டல்களுக்கு இடையில், 'எனது வெற்றிக்கு என் தாயின் ஆசிதான் காரணம்; இந்த விருதினை என் அம்மாவுக்கும் ஆண்டவனுக்கும் சமர்ப்பிக்கிறேன்'' என்று நன்றிப் பெருக்குடன் சொல்லிக்கொண்டிருந்த நேரத்தில், சென்னை கோடம்பாக்கத்தில் உள்ள ஏ.ஆர்.ரஹ்மானின் வீட்டில், அருகிலுள்ள குடிசைப் பகுதியில் வசிக்கும் வாண்டுப் படை சூழ, நடிகர் பார்த்திபனும் பெரிய திரையில் ஆஸ்கர் விருது விழாவைப் பார்த்துக்கொண்டிருந்தார். ரஹ்மானுக்கு விருது அறிவிக்கப்பட்டதும், தயாராக வைத்திருந்த பத்தாயிரம்வாலா வெடியை, ஒரு குழந்தையைப் போல குதூகலத்துடன் வெடித்து, கொண்டாடிய கையோடு, கொண்டு வந்திருந்த கேக்கை வெட்டி அனைவருக்கும் விநியோகித்தார். தனக்கே விருது கிடைத்துவிட்டதுபோல அவரது முகத்தில் அப்படி ஒரு பூரிப்பு.

''மற்றவர்களைச் சந்தோஷப்படுத்தி, நாம சந்தோஷப்படுவது சின்ன சந்தோஷம். ஆனா மற்றவங்களோட சந்தோஷத்தையும் நம்ம சந்தோஷமா பெரிசா கொண்டாடும் போது கிடைப்பது பெரிய சந்தோஷம். சின்ன சந்தோஷத்தை வார்த்தைகள்ல சொல்லிடலாம்; பெரிய சந்தோஷத்தை வார்த்தைகள்ல அடக்க முடியாது. அதைத் தான் நான் அந்த தருணத்துல அனுபவிச்சேன். நாளைக்கு ரஹ்மான் ஊருக்கு வந்த பிறகு அவர் கையில பொக்கெ கொடுத்து வாய் நிறைய வாழ்த்தினாலும், இந்த சந்தோஷத்துக்கு இணையாகாது'' அனுபவித்துப் பேசினார் பார்த்திபன்.

இது இன்றைய சந்தோஷம்! இந்த நேரத்தில் நினைத்துப் பார்க்க வேண்டிய ஒரு ஃப்ளாஷ்-பேக் இது!

சென்னையின் நட்சத்திர ஓட்டல் ஒன்றில் ஒரு ஆடியோ கேசட் வெளியீட்டு விழா. மேடையில் கே.பாலசந்தரும், மணிரத்னமும் இருக்கிறார்கள். அந்தப் படத்தின் பாடல்கள் ஒலிக்கின்றன. 'இந்த அற்புதமான பாடல்களை உருவாக்கியவர் புதிய இசையமைப்பாளர் ஏ.ஆர்.ரஹ்மான்' என்று அறிவித்ததும், பார்வையாளர்களில் ஒருவராக அமர்ந்திருந்த ரஹ்மான் எழுந்து மேடைக்கு வருகிறார். அவரை கை குலுக்கி வரவேற்ற பாலசந்தர், ஆரத் தழுவிக் கொள்கிறார். அப்போது அவர் சொன்ன வார்த்தைகள்: ''நீங்கள் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். இந்த இளைஞர் திரை உலகில் பெரிய அளவில் சாதிக்கப் போகிறார்.'' அவர் சொன்னது பலித்துவிட்டது. அகில உலக அளவில் ரஹ்மானின் இசைக்கு அங்கீகாரம் கிடைத்துவிட்டது.

''கவிதாலயாவுக்கு ஒரு படம் பண்ண

வேண்டும் என்று நான் இயக்குனர் மணி ரத்னத்திடம் ஃபோனில் கேட்ட சில மணி நேரங்களில் என்னை நேரில் சந்திக்க வந்துவிட்டார் மணி. அவர் என்னிடம் சொன்ன மூன்று கதைச் சுருக்கங்களில் என்னை மிகவும் கவர்ந்தது 'ரோஜா' கதை. அந்தப் படத்துக்கு ஒரு புதிய இசை யமைப்பாளரைப் பயன்படுத்த விரும்பிய மணி, சில விளம்பரங்களை ஒரு கேசட்டில் பதிவு செய்து எனக்கு அனுப்பி வைத்தார். அந்த விளம்பர டியூன்களில் ஒரு அதீத ஈர்ப்பு இருந்தது. அடுத்து, ஊட்டியில் 'வானமே எல்லை' ஷூட்டிங்கில் இருந்த எனக்கு ஒரு டியூனை அனுப்பி வைத்தார். அந்த டியூன் ரொம்பப் பிடித்துப் போய் மீண்டும் மீண்டும் கேட்டேன். அதற்கு

* பாலசந்தர், மணிரத்னத்துடன்...



வைரமுத்துவால் எழுதப்பட்ட பாடல்தான் 'சின்ன சின்ன ஆசை!' 'ரோஜா'வின் மூலம் அனைவரையும் ஈர்த்த ஏ.ஆர்.ரஹ்மானுக்கு, ஆஸ்கர் என்னும் ரோஜா கிடைத்திருக்கிறது. அவருடைய டெடிகேஷன், தேடல், சின்சியாரிட்டி, இதற்கும் மேலாக அடக்கம். அதற்கே இன்னொரு ஆஸ்கர் கொடுக்கலாம்!' என்று கூறுகிறார் கே.பாலசந்தர்.

''ரஹ்மான், பள்ளிக்கூடத்தில்

எனக்கு இரண்டு வருஷம் ஜூனியர்'' என்கிறார் வந்தே மாதரம் புகழ் பரத் பாலா. ''ரஹ்மான் சினிமாவுக்கு வருவதற்கு முன்னால் நாங்கள் உருவாக்கிய பல விளம்பரங்களில் பணியாற்றி இருக்கிறார். இந்திய சுதந்திரப் பொன்விழா சமயத்தில், ரஹ்மான் இசையமைத்துப் பாடிய 'வந்தேமாதரம்' பெற்ற வரவேற்பு உலகப் பிரசித்தம். இன்னும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. ஒரு நாள் இரவு நாங்கள் இரண்டு பேரும் ரஹ்மானின் ஸ்டுடியோவிலேயே படுத்துத் தூங்கிவிட்டோம். திடீரென்று ரஹ்மான் கண் விழித்து என்னை எழுப்பினார். ஸ்டுடியோவில் அவருடைய சவுண்டு என்ஜினீயர் இல்லாத சூழ்நிலையில் பாடலை எப்படி



* வைரமுத்து

கீ போர்டு பிளேயர். எங்கள் பள்ளிக்கூட ஆண்டு விழாக்களில் திலீப்பின் கீ போர்டு நிகழ்ச்சி தவறாமல் இடம் பெறும். அப்போதே அவர் விளம்பரங்களுக்குப் பணியாற்றினார். பல நாட்களில் அவர் காலையில் ரெகார்டிங் ஸ்டுடியோவிலிருந்து நேரே ஸ்கூலுக்கு வந்து விடுவார். அவருடைய அம்மா காலை உணவையும், ஸ்கூல் யூனிஃபாரத்தையும் எடுத்துக்கொண்டு ஸ்கூலுக்கு வருவார். அவருடைய அப்பாவின் எதிர்பாராத மரணம் காரணமாக அவர் படிப்பை நிறுத்தும் சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. சில வருடங்களுக்கு முன்பு, எங்கள் பள்ளி ஆண்டுவிழாவுக்கு சிறப்பு விருந்தினராக வந்திருந்து எங்களைப் பெரு



* பரத் பாலாவுடன்...

**"சின்ன சந்தோஷத்தை வார்த்தைகளால் சொல்லிவிடலாம், பெரிய சந்தோஷத்தை அப்படி வார்த்தைகளால் அடக்க முடியாது."**

ஒலிப்பதிவு செய்வது என்று எனக்குச் சொல்லிக்கொடுத்துவிட்டு, ஒலிப்பதிவு அறைக்குள் போனார் ரஹ்மான். அந்தக் கணத்தில் பிறந்ததுதான் ஆல் நியூ வந்தே மாதரம். அப்போது இரவு மணி ஒன்று'' என்று வந்தே மாதரம் உருவான கதையை, மும்பையிலிருந்து டெலிஃபோனில் நம்மிடம் நெகிழ்வுடன் பகிர்ந்துகொண்டார் பரத் பாலா.

''படிக்கிற காலத்திலேயே அவர் சிறந்த

மைப்படுத்தினார் ரஹ்மான்'' என்று பெருமைப்படுகிறார் பத்மா சேஷாத்ரி பள்ளியின் நிறுவனரான திருமதி ஒய்.ஜி.பி.

''இசை என்பது ரஹ்மானைப் பொறுத்த வரை தொழில் அல்ல; தவம். அந்தத் தவத்தால் அவருக்குக் கிடைத்துள்ள வரம்தான் இந்த விருதுகள்'' என்று வாழ்த்து சொல்லி இருக்கிறார் வைரமுத்து. முத்தான வார்த்தைகள்!

– எஸ். சந்திரமௌலி



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942


## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.



# பண்பாட்டு முகவரி!

சீதை பிரிக்கப்பட்டு விட்டாள். தாளாத துயரத்திலும் ராமனுக்கு ஒரே ஆறுதல் இலக்குமணன் மட்டுமே. ஓர் இரவில் தண்ணீரைத் தேடி இலக்குமணன் செல்ல, அயோமுகி என்ற அரக்கி அவனைக் கண்டு காதலாகி விடுகிறாள். வெறுப்புறுத்தும் அவளை விலக்கிவிட்டு தன் வழிநடக்கிறான் இலக்குமணன். மோகம் கண்களை மறைக்க, 'மோகனம்' என்னும் செய்வினை செய்து இலக்குமணனைத் தூக்கிக் கொண்டு வானத்தில் மறைந்து விடுகிறாள் அயோமுகி.

இலக்குமணனை இன்னமும் காணவில்லையே என்று பதைபதைத்துப் போய்விடுகிறான் ராமன். ''தந்தையைப் பிரிந்தேன்; தாயைப் பிரிந்தேன்; பொன்னையொத்த சீதையைப் பிரிந்தேன். ஆனால் இன்னமும் உயிரோடு திரிகிறேன் என்றால் நீ உடனிருப்பதால் அன்றோ?'' என்று புலம்புகிறான் ராமன். ''என் தொல்வினைகள் எனக்கு நல்வாழ்க்கையை அமைக்கவே விடாதோ?'' என்று கதறுகிறான். இனி யாருக்காக வாழ வேண்டும் என்று வாழ்க்கையின் மீது வெறுப்பே ஏற்பட்டு விடுகிறது.

''அரண்மனை இன்பங்கள் மட்டுமன்று; ஆருயிர் மனையாளால் அடையும் இன்பங்களையும் துறந்து விட்டு என்னுடன் கானகம் வந்தவனல்லவா இலக்குவன்'' என்று கண்ணீர் வடிக்கிறான் ராமன். தனி வாழ்வே அறியாத தனது உடன் பிறப்பு தன்னுடன் இல்லை என்கிறபோது ஊற்றுநீர் போல கண்ணீர் கொட்டியது. அவன் உயிரோடு இருப்பான் என்பதற்கு எந்த உறுதியும் இல்லை. இறுதியாக, ''நீ மீண்டும் பிறக்கும்போது எனக்கு அண்ணனாகப் பிறந்து விடு; நான் உனக்குத் தம்பியாகப் பிறந்து சேவகம் செய்கிறேன்'' என்று தன் உயிரை வாள் கொண்டு மாய்த்துக் கொள்ள முடிவு செய்கிறான் (கம்பராமாயண பாடல் 3718).




தம்பியின் இழப்பைத் தாங்கமாட்டாமல் தற்

கொலைக்கு முயல்வது ராமனின் தூய அன்பை வெளிப்படுத்துகிறது. பாசப் பற்றை அறுக்க முடியாத மானிடனாகவே திகழ்கிறான்.

கம்பராமாயணத்தில் வரும் இந்த பாசமலர் காட்சியை, தனது 'எல்லைகள் நீத்த ராமகாதை' என்ற புத்தகத்தில் உருக்கமாகச் சொல்கிறார் ஆசிரியர் பழ.கருப்பையா.

ராமாயணத்தில் வரும் பாத்திரங்களை, தமது பாணியில் திறனாய்வு செய்து, கம்பரசத்தில் மூழ்கி, நமக்கு நல்முத்துக் களை எடுத்திருக்கிறார். அது மட்டுமா? கம்பனின் வினைக் கொள்கை; கடவுள்



"பாசப்பற்றை அறுக்க முடியாத மானிடனாகவே திகழ்கிறான் இராமன்"

கோட்பாடு என்று விமர்சனக் கண்ணோட் டத்தை முன்வைக்கிறார். கம்பராமாயணத் துக்கு அவதூறு கற்பிக்க முயன்ற திராவிட இயக்கத்தைக் கிண்டலடித்துக் கண்டிக் கிறார். ''தமிழர்களின் முழு முகவரி வள்ளு வர். தமிழர்களின் பண்பாட்டு முகவரி கண்ணகி. சரயூ ஆற்றங்கரையில் பிறந்து கங்கை, கோதாவரி சமவெளிகளைக் கடந்து ராமேஸ்வரம், இலங்கை ஆகியவற்றைத் தனது ஈரடியால் அளந்து நமது நாட்டை ஒருமைப்படுத்திய ராமன், **இந்தியாவின்** பண்பாட்டு முகவரி'' என்று முடிக்கிறார் பழ.கருப்பையா.

**- கௌசி**



# கல்கி



2009 மார்ச் 8
ஸர்வதாரி மாசி 24
மலர் : 67
இதழ் : 32

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## வன்முறைக் கட்சியில் வழக்கறிஞர்கள் !

சுப்ரமண்யன் சுவாமி மீது, உயர்நீதிமன்றத்திலேயே தாக்குதல் நடத்திய வழக்கறிஞர்களின் அத்துமீறலை, நீதிபதி கே.பி.மிச்ராவும் கே.சந்துருவும் பதிவு செய்துள்ளனர். ஆனால், அதன் அடிப்படையில், அத்துமீறியவர்கள் பேரில் எந்த நடவடிக்கையும் இதுவரை எடுக்கப்படவேயில்லை! இதற்கு அரசும் நீதிமன்றமும் ஏன் தயங்க வேண்டும்? இதனை வற்புறுத்தவோ தட்டிக் கேட்கவோ தமிழகத்தில் வெகு சில குரல்களே எழுந்துள்ளன.

தவறு இழைத்த வழக்கறிஞர்கள் பேரில் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்கிறபோது, அத்துமீறல்கள் தொடர்வதிலும் வன்முறை பெருகுவதிலும் ஆச்சர்யமில்லை. தமிழக வழக்கறிஞர்களுக்கும் காவல் துறைக்கும் இடையிலான ஒரு போராட்டமாக இப்பிரச்னை திசை மாறியிருப்பது துரதிர்ஷ்டவசமானது. இந்த இரு பிரிவுகளிலுமே அரசியல் சார்பு நிலை ஊடுருவியிருப்பதை இது உணர்த்துகிறது.

ஜனநாயகத்தில் ஆட்சிமன்றம், நிர்வாக மன்றம், நீதி மன்றம் ஆகியவற்றை சுதந்திர அதிகாரம் படைத்த மையங்களாக நிறுவியதற்கு முக்கியக் காரணம் உண்டு. ஒரு பிரிவில் நிகழக்கூடிய அத்துமீறல் அல்லது அதிகார துஷ்பிரயோகத்தை மற்றொரு பிரிவு கண்காணித்துத் தட்டிக் கேட்கவும் தடுக்கவும் இது வகை செய்கிறது. இந்த மூன்று பிரிவுகளுள் ஆட்சிமன்றத்திலும் நிர்வாக மன்றத்திலும்

வேண்டுகோள்
உண்ணாவிரதம்

அரசியல் நோக்கில் மக்கள் நலன் புறக்கணிப்பு ஏற்கெனவே நிகழ்ந்து, ஜனநாயக மரபுகள் சீர்குலைந்து வருகின்றன. இப்போது வழக்கறிஞர்களும் பட்டவர்த்தனமான அரசியல் சார்புடன் செயல்பட்டு வருவதால், வெகு விரைவிலேயே நீதிமன்றமும் கட்சி அரசியல் பிடிக்குள் உட்படும் அபாயம் நேர்ந்துள்ளது. இன்று கட்சி விசுவாசிகளான வழக்கறிஞர்கள் அரசு வழக்குரைஞர்களாக நியமிக்கப்படுகிறார்கள். நாளை அதே போன்ற விசுவாசிகள்தான் நீதிபதிகளாக முடியும் என்கிற எழுதப்படாத விதி உருவானால் அது நாட்டுக்கு நேரும் மிகப் பெரும் அபாயமாகப் போய்விடும்!

வழக்கறிஞர்களுக்கும் தனிப்பட்ட பார்வைகள், சித்தாந்தங்கள், அரசியல் கட்சி அனுதாபங்கள் இருப்பதைத் தவிர்க்க முடியாது. ஆனால், அவற்றை ஒதுக்கி வைத்துவிட்டுத்தான் அவர்கள் தங்கள் தொழிலில் ஈடுபட வேண்டும். பத்திரிகைத் துறையைப் போல, வழக்கறிஞர் தொழிலுக்கும் ஒருசார்பின்றி உண்மையை நிலைநாட்டும் உயர் நோக்குதான் ஆதாரம். மருத்துவத் துறை, கல்வித் துறை போலவே இத்துறைக்கும் சமூக மேன்மை என்பது ஒரு முக்கியக் குறிக்கோளாக இருக்க வேண்டும்.

ஆனால், இங்கே வழக்கறிஞர்கள் கட்சி சார்பும் ஜாதி மனப்பான்மையும் கொண்டிருப்பதோடு, அமைச்சருடன் பேச்சு வார்த்தைக்கு வருவதாகச் சொல்லிவிட்டுப் பின்னர் அதைப் புறக்கணிக்கும் அளவுக்கு அலட்சியப் போக்கு படைத்தவர்களாகவும் இருக்கிறார்கள்! தங்கள் கட்சிக்காரர்களின் வழக்கு பற்றிக் கவலைப்படாமல் கட்சி அபிமானத்தால் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். அதிலும் வன்முறையில் ஈடுபடுகிறார்கள்! சி.பி.ஐ. விசாரணை நிகழ்த்துவதன் மூலம், உயர்நீதிமன்ற வளாகத்திலேயே நடைபெற்ற மோதல் குறித்த சில உண்மைகளை வேண்டுமானால் வெளிப்படுத்தலாம். ஆனால் நிரந்தரத் தீர்வு பிறக்காது. அரசியலும் அதனுள் விரவிக் கிடக்கும் ஜாதி, மதச் சார்பு நிலைப்பாடுகளும் வழக்கறிஞர்கள் கட்டமைப்புக்குள்ளிருந்து களையப்பட வேண்டும். அதுவே முதலும் முடிவுமான தீர்வு. ●

# போட்டோ போட்டி முடிவு!

22.2.09 இதழில் அறிவித்த போட்டோ போட்டிக்கு நூற்றுக்கணக்கான 'கமெண்ட்ஸ்' வந்து குவிந்தன. அவற்றில் தேர்ந்தெடுக்கப்பட்ட 'கமெண்ட்ஸ்' இதோ! இவர்களுக்குப் புத்தகம் பரிசாக அனுப்பப்படுகிறது.

எல்லா புகழும்... ஊ... லலல்லா... என் இல்லாளுக்கே... ஊ லலல்லா... அந்த இல்லாளைத் தந்த அல்லாவுக்கே... ஊ...லலல்லா...

- மீனா முருகேசன், தஞ்சாவூர்

## இலங்கைப் பிரச்னையும்... இங்கிலீஷ் படமும்!

"நியாயமா, இந்த விருது, என் மனைவிக்குதான் கிடைக்கணும்! ஏன்னா, கிச்சன்லே, அவங்க சமைக்கும் போது வந்த பாத்திரங்களின் சத்தமே இந்தப் படத்துக்கு நான் இசையமைக்க உதவியாக இருந்தது."

- அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி-21

வழக்கம் போல இல்லாம, இன்னிக்கு மைக் முன்னாடி ஒரு மணி நேரம் பேசப் போறேன். ஓய்ஃபை இன்னும் பின்னாடி போகச் சொல்லுங்க.

- மு.மதிவாணன், அரூர்

இலங்கைப் போரை நிறுத்தற வரைக்கும் இனி 'இங்கிலீஷ்' படத்துக்கு இசையமைக்க மாட்டேன்னு அரசியல்வாதி மாதிரி ஸ்டண்ட் அடிக்கட்டுமா?

- பி.என்.ஜெய்குமார், திருவாரூர்

ஹா... அம்மாடி! ஆஸ்கார்கூட ஈசியா வாங்கிடலாம்! ஆனா ஒய்ஃப்கிட்ட பாராட்டு வாங்கறது கஷ்டம்!

- வே.முருகேசன், சென்னை-88

# உடல் பருமனுக்கு பை.. பை..



**சென்னை தி.நகரில் "ஸன்ரைஸ் ஹெர்பல் கிளினிக்" என்ற பெயரில் மூலிகை மருத்துவம் - ஆன்மீக மருத்துவம் செய்துவரும் டாக்டர் ஆர். பானுமதி...**

மூட்டு வலி, மூட்டு தேய்மானம் இவை இல்லாமல் வேறு எதற்கு ட்ரீட்மெண்ட் செய்கிறீர்கள் டாக்டர்?

தற்போதைய தலையாய பிரச்சனையான உடல் பருமனுக்கு மூலிகை மருந்து, உணவு மற்றும் மஜாஜ் மூலம் ட்ரீட்மெண்ட் அளிக்கிறேன்.

உடல் பருமனுக்கு முக்கிய காரணங்களான கொலஸ்டிரால், நீர் கோத்தல், கேஸ் பிராபளம், மல சிக்கல் தைராய்டு, இரத்த சோகை, உடல் வாகு மற்றும் மெனோபஸ் போன்ற காரணங்களால் (ஒருநபரின்) வெயிட் அதிகமாகும். இந்த காரணங்களை தவிர்த்தாலே உடல் பருமன் குறையும். அந்த உடல் பருமனை குறைத்து பிறகு டயட், வாக்கிங் என்று தொடரும் போது உடல் பருமனை மீண்டும் வராமல் கட்டுப் படுத்தலாம். அனைத்து பிரச்சனைகளுக்கும் அணுகவும்...

**Dr. பானுமதியின்**

காரை சித்தரின் கனக வைப்பு • உச்சி முதல் பாதம் வரை
சர்க்கரைக்கு பை... பை... • 108 சிட்டிகா வைத்தியம் புத்தகங்களுக்கு அணுகவும்

Dr. R. Bhaanhumathy
பு.எண். 15, மன்னார் தெரு, தி.நகர்,
பஸ் ஸ்டாண்டு எதிரில், சென்னை - 600 017.
**போன்: 6534 1646 செல்: 90031 95545, 94443 38713**

**கோவை தொடர்புக்கு: 99943 27016**

**ராமாவரத்தில் மருந்துகள் கிடைக்கும்**
**92823 26675**

---

ஸ்ரீ சிவ சக்தி | ஸ்ரீ சமயபுரம் மாரியம்மன் துணை | எல்லாபுகழும் இறைவனுக்கே



சிவ சிவ

**குரு இல்லாமல் கரு இல்லை**
**மந்திர மாந்திரீகா அரபி முஸ்லீம் வித்தைகளையும்**
**சித்தர்கள் பயன்படுத்திய மூலிகைகளின் பயன் பற்றி கற்று**
**தந்த என் குருமார்களுக்கு தலை வணங்குகின்றேன்.**

நாம் வாழும் கம்ப்யூட்டர் காலகட்டத்தில் மனிதர்களுக்கு ஏற்படுகின்ற இன்ப துன்பங்கள், பிறர் இடம் சொல்ல முடியாத துயரங்கள் மனதிற்குள்ளேயே போட்டு போட்டு மறைக்கப்பட்டவைகள், யாரிடமும் சொல்லலாமா வேண்டாமா என்று பல போராட்டங்கள், படிக்கின்ற வயதில் செய்கின்ற அறியாத தவறுகள், நாம் வாழும் வாழ்க்கையில் கூட பல இடையூர்கள், உழைத்து களைத்து வீட்டுக்கு செல்லும் போது கூட அக்கம் பக்கத்து வீட்டு பிரச்சனைகள், இவைகளை எப்படி சமாளிப்பது, வாருங்கள்... மலைகள், காடுகள் என அலைந்து திரிந்து சித்தர்களால் மறைக்கப்பட்ட மூலிகைகள், வேர்களைக் கொண்டு எந்த காரியத்திற்கு எந்த கோவிலில் பரிகாரம் செய்ய வேண்டும், குல தெய்வ வழிபாடு, எந்திரங்களையும் சக்கரங்களையும் எப்படி பயன்படுத்தினால் சக்திகளை பெற முடியும் என்றும்.

தான் கற்ற எந்திர மந்திர எட்சன் வித்தைகளையும், மனோ வசிய கலை, மை, விபூதி தயாரித்த தேவையான மூலிகைகளும் கற்று தரப்படும். திருமண தடை, மாங்கல்ய தோஷம் உள்ளவர்களுக்கு தோஜ நிவர்த்தி, பரிகாரம் செய்யப்படும். காரிய வெற்றி, எதிரிகள் தொல்லை, பயகோளாறு இவைகளை போக்க சிவலிங்க ருத்திராட்சம் Rs. 500 அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

**பி.பி.ஜி. செல்வகுமார் - பெரிய பாளைய அம்மன் ஆலயம்**
371/4 சிவன் கோவில் தெரு, கொளபாக்கம் அஞ்சல் வண்டலூர் வழி, காஞ்சிபுரம் மாவட்டம்.
சென்னை - 600 048 செல்: 94441 35526, 94447 09912

**இலவச ஆலோசனைக்கு தொடர்பு கொள்ளவும் முன் அனுமதி பெற்று வரவும்.**

**www.goodparenting.co.in**

நீங்கள் தாய்மாரா? அப்படியெனில் நீங்கள் வாழ்வது உங்களுக்காக மட்டுமில்லை. உங்கள் குழந்தைகளுக்காகவும்தான். குழந்தை வளர்ப்பது ஒரு கடமை மட்டுமன்று. கலையும்கூட.

தம்பதிகள் ஒருபோதும் குழந்தைகளுக்கு முன்னால் சண்டையிடக் கூடாது. அவர்களின் ஆழ்மனத்தில் உருவாகும் அச்ச உணர்வு, வளர்ந்து பெரியவர்களான பிறகும் தொடர வாய்ப்பிருக்கிறது.

அடிக்கடி குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஆடம்பரமாக ஷாப்பிங் செய்யப் போவதும் பெருந்தவறு. அதுதான் சரியான 'லைஃப் ஸ்டைல்' என்று அவர்கள் தவறாக முடிவெடுப்பதற்கும் நீங்களே காரணமாகிவிடுவீர்கள்.

குழந்தைகளுடன் இருக்கும்போது உறவினர்களைப் பற்றியோ, நண்பர்களைப் பற்றியோ மறந்தும்கூட 'கமெண்ட்' அடிக்க வேண்டாம். அது சகமனிதர்களைப் பற்றிய தாழ்வான அபிப்ராயங்களை அவர்கள் மனத்தில் உண்டாக்கும்.

அன்புக் குழந்தையின்மீது அலாதி அக்கறை எடுத்துக்கொள்வது சரிதான். அதற்காக, எப்போதும் உங்களது பாதுகாப்பு வளையத்துக்குள்ளேயே சிறைவைக்காதீர்கள். பின்னாட்களில் நீங்கள் இல்லாத சமயங்களில் அவர்கள் சுயமாய் முடிவெடுக்க முடியாமல் திணறிப் போய்விடுவார்கள். அதே மாதிரி முழுச் சுதந்திரம் கொடுப்பதும் தவறு. ஒரு வரையறுக்கப்பட்ட ஒழுங்கு முறைக்குள் வாழ்வதற்கு அவர்களை இயல்பாகப் பழக்கப்படுத்துங்கள்.

இப்படி குழந்தை வளர்ப்பில் செய்யக் கூடாதவை என்பதற்கே நீண்ட நெடியதொரு லிஸ்ட் இருக்கிறது. செய்ய வேண்டியவை என்னென்ன என்று கேட்பவர்கள் இந்த இணைய தளத்துக்குள் சிற்றுலா சென்று வரலாம்.



## www.jewellery.indianetzone.com

என்னதான் உச்சாணிக் கொம்புக்கு விலை ஏறினாலும், நகைகளை விரும்பாத நங்கையரும் உண்டோ?

நகைகளை வாங்கும்போது அதன் வடிவமைப்பில் மட்டும் கவனம் செலுத்தினால் போதாது. தரத்தை அறிவதிலும் அதிகக் கவனம் வேண்டும். கே.டி.எம். நகைகளுக்கு மட்டும் ஏன் அதிகபட்சமாக சேதாரம் கேட்கிறார்கள் என்று யோசித்திருக்கிறீர்களா?

ஏனெனில் அந்த வகை நகைகளை விற்பதால், தயாரிப்பாளர்களுக்கோ வியாபாரிகளுக்கோ பெரிதளவில் லாபமில்லை.

கே.டி.எம். தொழில்நுட்பத்தில் தங்க நகைகள் செய்யும்போது, செம்புப்பொடி முற்றிலும் தவிர்க்கப்படுகிறது. எனவே அதன் விலை அதிகமாக இருக்கும். வாங்கிய நகையை அதே விலையில் தான் விற்க வேண்டுமென்று நீங்கள் விரும்பும் பட்சத்தில், கே.டி.எம். நகைகளே சிறந்த தேர்வு.



நகைகளின் வகைகள், விலையுயர்ந்த கற்கள், நகை செய்யும் முறை, வைரம் மற்றும் உலோக நகைகள், நகைகளின் வரலாறு, இந்திய நகை வகைகள், அவற்றைப் பராமரிக்கும் முறைகள் என்று மேலும் பல விஷயங்களை அறிய இந்த வலைக்குள் நுழையலாம்.

### 'வலை'யோடு விளையாடு

## www.new.nic.in

கல்வியறிவற்ற பெண்களுக்கு தங்களது உரிமைகள் பற்றி விழிப்புணர்ச்சியில்லை என்பது வருத்தப்பட வேண்டிய விஷயம்தான். ஆனால், படித்து பட்டம் பெற்ற பெண்களிலேயே எத்தனை பேருக்கு தமது உரிமைகள் பற்றிய முழு அறிவு இருக்கிறது? முற்றும் அறியாமலிருப்பதைப் போலவே அரைகுறை அறிவும் ஆபத்தானதுதான்.

தேசிய மகளிர் ஆணையத்தின் இந்த இணைய தளத்தில் ஆணையத்தின் பணிகள், அதன் வெளியீடுகள், திட்டங்கள், இணையவழியாகவே புகார் செய்யும் முறைகள், உதவிக்கு அணுகவேண்டிய தொலைபேசி எண்கள் என்று பல்வேறு விவரங்களும் வழங்கப்பட்டிருக்கின்றன.

வரதட்சணை, குடும்ப வன்முறை, பணியிடங்களில் பாலியல் தொந்தரவுகள், வன்புணர்ச்சி, குழந்தைத் திருமணம், சொத்துரிமை, இலவச சட்ட உதவி என்று ஒவ்வொரு பெண்ணும் அவசியம் அறிந்திருக்க வேண்டிய அத்தனை விஷயங்களும் இத்தளத்தில் அடக்கம்.

விவசாயத்தில் பெண்கள் பற்றிய தேசியக் கொள்கையின் வரைவும் இதில் இடம் பெற்றிருக்கிறது. விருப்பமுள்ளவர்கள் இவ்வரைவு குறித்த தங்களது கருத்துகளையும் ஆணையத்துக்கு அனுப்பி வைக்கலாம்.

**- ஸாந்த்**



''ஒரு மனிதன் சாதனையின் உச்சத்தைத் தொடுவதற்கு அவன் ஆரம்பிக்கும் இடம் சரியாக இருக்க வேண்டும். நான் என் கேரியரை ஆரம்பித்த இடம் கல்கி. கல்கியில் ஃபோட்டோகிராபராகத் துவங்கிய பயணம், சினிமாவில் கேமராமேன், டைரக்டர் என ஏவி.எம். வரை வந்திருக்கிறது'' என்று உணர்வு பூர்வமாக பேசத் துவங்குகிறார் கே.வி. ஆனந்த். தனது 'அயன்' படம் பற்றியும், கடந்துவந்த பாதையின் வழிகாட்டிகளையும் தம் ஞாபகக் கோப்பு மீது வெளிச்சம்போட்டுக் காட்டினார்.

ஒருநாள் ஸ்ரீரங்கம் பெருமாள் வடகலையா? தென்கலையா? என்ற பிரச்னை, மற்றொரு நாள் புதுக் கோட்டை அருகே சுகாதாரமற்ற தண்ணீரால் போலியோ பாதித்த குழந்தைகள்... என சமூகத்தின் பல்வேறு முகங்களை, கல்கிக்காகப் படம் பிடித்திருக்கிறேன். பல்வேறு மாநிலத் தலைவர்களைச் சந்திக்கும் வாய்ப்பு கல்கி மூலம் எனக்குக் கிடைத்திருக்கிறது. யதார்த்தமான உண்மைகளையும், சமூக பிம்பங்களையும் கல்கிதான் எனக்குக் காட்டியது.

ஃபோட்டோகிராபியில் பரிசோதனை முயற்சி செய்வது என்பது காஸ்ட்லியான விஷயம். கல்கிக்காக எத்தனையோ ஃபோட்டோக்களை பரிசோதனை முயற்சியாக எடுத்து இருக்கிறேன். அதுதான் இன்றும் சினிமோட்டோகிராபியில் உதவுகிறது.

## குரு

திரையில் ஸ்டார்களை மட்டும் பார்த்து விசிலடித்த ரசிகன், கேமராமேன் பெயரை திரையில் பார்த்து விசிலடித்தது

எங்கள் குரு பி.சி.ஸ்ரீராமுக்காக மட்டுமே. தமிழ் சினிமாவின் தொழில்நுட்பத்தை உலகத் தரத்துக்கு உயர்த்தியது ஸ்ரீராம் சார்தான். அவர் திறந்த புத்தகம். எந்த நேரமும் தேடல் உள்ளவர். தன்னைப் போன்று தேடல் உள்ள மாணவனைத் தட்டிக் கொடுத்து கற்றுத் தருபவர். திரு, எம்.எஸ்.பிரபு, அரவிந்த் கிருஷ்ணா, பாலு என எல்லோருமே ஸ்ரீராம் சார் ஏற்படுத்திய பாதையில் பயணித்துக் கொண்டிருக் கிறோம்.

### டெக்னாலஜி

**மா**டர்ன் சினிமா டெக்னாலஜி நல்ல திரைக்கதைக்கு மாற்றாக இருக்க முடியாது. டெக்னாலஜியைத் திணிக்கக் கூடாது. திணிக்கப்படும் தொழில்நுட்பம் தோற்றுப் போகும்! திரைக்கதைக்கு சப்போர்ட் செய்யும் விதமாக டெக்னாலஜி அமைய வேண்டும். இன்றைய சினிமா டெக்னாலஜி காஸ்ட்லி

# கல்கி to அயன்

யான விஷயம் என்ற எண்ணம் உள்ளது. உண்மை யில் பணத்தையும், நேரத்தையும் மிச்சப் படுத்துவதில் தொழில் நுட்பத்தின் பங்கு முக்கியமானது. ஆர்ட்டிஸ்ட்டுகள் செய்யத் தயங்கும் ரிஸ்க்கான ஷாட்டுகளை, அவர்கள் இல்லாமலேயே தொழில்நுட்பம்

**மாடர்ன் சினிமா டெக்னாலஜி நல்ல திரைக்கதைக்கு மாற்றாக இருக்கமுடியாது. டெக்னாலஜியைத் திணிக்கக்கூடாது.**

செய்து விடுகிறது.

### அயன்

**இ**ன்றைய தமிழ் இண்டஸ்ட்ரி ரீமிக்ஸ் டிரெண்டாக இருப்பதாகச் சொல்கிறார்கள். அன்றைக்கு இருந்தவர்கள் செய்த விஷயத்தை, இன்றைய யூத் செய்தால் எப்படி இருக்கும் என்று பார்ப்பது வேடிக்கையான பரீட்சார்த்த முயற்சிதான். இதில் கவலைப்பட ஒன்றுமில்லை. அயன் ஸ்கிரிப்ட் இதுவரையில் யாரும் செய்யாத களம் என்பதால் ஏவி.எம்.சரவணன் சார் உடனே ஓ.கே. சொன்னார். சூர்யா மற்ற படங்களில் செய்ததைவிட அதிகமான ரிஸ்க் எடுத்திருக்கிறார். 'அயன்' நிச்சயம் ரசிகர்கள் மனத்தில் சிம்மாசனமிடும்.

**- ராகவ்குமார்**



நம்ம சினிமாவில் வர்ற மாதிரிதான். சின்னத் தகராறு என்றாலும் வெட்டரிவாளைத் தூக்குகிற கிராமம் ஜருகு. (சேலம் - தர்மபுரி சாலை வெள்ளக்கல்லிலிருந்து ஆறு கிலோ மீட்டர் உள்ளடங்கியது). இன்று ஊரின் க்ரைம் ரேட் வெகுவாகக் குறைந்துள்ளது. காரணம் யோகா! கிராமத்தின் மேனிலைப் பள்ளியில் படிக்கும் மாணவ, மாணவிகள் நானூறு பேர், பொது மக்கள் இருநூற்றைம்பது பேர் என அனைவரும் நன்றியுடன் ஒரு நபரைச் சுட்டிக்காட்டுகிறார்கள். அவர்... தர்மபுரி தனிப்பிரிவு குற்றப் புலனாய்வுத் துறையின் உதவி ஆய்வாளர் த. வெங்கடேசன்.



# சாதனைக்கு



* த. வெங்கடேசன்

**யோ**கா பயிற்சிக்கென ஒரு மையத்தை, தன் சொந்தச் செலவில் கட்டித் தந்திருக்கிறார். கிராமத்தில் இரண்டு ஆண்டுகளாகப் பயிற்சி பெற்றவர்களில், ஆர்வம் உள்ளவர்களை ஆசிரியர்களாக நியமனம் செய்துள்ளார். கோவை பாரதியார் யுனிவர்சிட்டியில் எம்.ஏ. (யோகமும் மனித மாண்பும்) முதல் ஆண்டு தேர்ச்சி பெற்று, இரண்டாம் ஆண்டு பயின்று வருகிறார்.

இவர் மூலம் பயிற்சி பெற்றவர்கள் தங்கள் அனுபவங்களை நெகிழ்ச்சியுடன் பகிர்ந்துகொள்கிறார்கள். ''பத்து வருஷமா ஏசியன் பெயிண்ட் கம்பெனி சார்பா பெயிண்டரா வேலை பார்க்கறேன். ரெண்டு வருஷமா யோகா பயிற்சியில் தினசரி ஈடுபடுறேன். இதனால எனக்கு உடல் அசதி வந்ததில்லை. மனச்சோர்வும் ஏற்பட்டதில்லை. வேலையில கவனம் சிதறாம இருக்கு. சிறந்த பெயிண்டராக தமிழ்நாட்டில் ரெண்டாவது இடம் எனக்குத் தந்திருக்கு ஏசியன் பெயிண்ட்!'' என்கிறார் முருகன்.

''எனக்கு வயசு இருபத்தெட்டு. விசைத் தறியில கூலித் தொழிலாளி. மூணு வருசத்துக்கு முன்னால என் இதயத்துல அடைப்பு. ஆபரேஷன் பண்ணி ஆகணும்னு சொல்லிட்டாங்க. பணத்துக்கு நான் எங்கே போவேன்? காசியண்ணன், அப்புறம் ஏட்டய்யா (வெங்கடேசன்) இவங்க எல்லாம் மனவளக்கலை மன்றம் மூலமா



# ஒரு சல்யூட்!

பணம் திரட்டித் தந்தாங்க. எனக்கு ஆபரேஷன் ஆச்சு. இப்ப ஆறு மாசமா நானும் யோகா செஞ்சு வர்றேன். எனக்கு எந்தச் சிரமமும் தெரியலை!'' எனச் சொல்கிறார் மனோகர்.

பெருமாயி அந்த ஊரிலேயே மிகவும் வயதான பாட்டி, ''அப்பப்ப மூச்சுப் பயிற்சி பண்றேன். நான் நல்லா நடை உடையாத்தான் இருக்கேன்!'' என்கிறார்.

கிட்டத்தட்ட ஒரு ஊரையே யோகாவில் கட்டிப் போட்ட வெங்கடேசனைச் சந்தித்து, ''எப்படி இப்படியொரு எண்ணம் வந்தது?'' என்று கேட்டோம்.

''2002ல் தமிழ்நாடு முழுவதும், காவல் துறையில் பணிபுரிபவர்களுக்கு வேதாத்ரி மகரிஷியின் மனவளக் கலை மன்றம் யோகா பயிற்சி தந்தது. அதில் ஏழு நாட்கள் பயிற்சி பெற்றேன். அப்போது என் உடல்நலத்திலும் என் மனநிலையிலும் நல்ல மாற்றம் தெரிந்தது. நேரம் வாய்த்தபோதெல்லாம் மனவளக்கலை மன்றம் சென்று, பயிற்சியில் ஈடுபட்டேன். அங்கு ஐந்து கட்டப் பயிற்சி நிறைவு செய்தேன். மனவளக்கலை மன்றத்தின் யோகா ஆசிரியர் ஆனேன்.

நாம் கற்றதை, வாழ்வில் அனுபவித்து உணர்ந்ததை நம்முடைய பூர்விக கிராம மக்களுக்கும் கொடுக்க எண்ணினேன். ஓய்வு கிட்டும் போதெல்லாம் தர்மபுரியிலிருந்து, என் கிராமத்துக்கு வந்து கற்றுத் தந்தேன். நான் பெற்றதை நான்கு பேருக்குக் கொடுத்ததில் சின்ன சந்தோஷம். அவ்வளவுதான்'' என்று சுருக்கமாக முடித்துக் கொண்டார் வெங்கடேசன்.

கிட்டத்தட்ட 650 பேருக்குக் கற்றுத் தந்துவிட்டு, 'நாலு பேர்' என்று சொல்லும் அவரது அடக்கமான சாதனைக்கு ஒரு சல்யூட்!

- செய்தி, படங்கள் :

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



* மனோகர்



* பெருமாயி

**சிதம்பரம் நடராஜர் ஆலயத்தின் நிர்வாகத்தை நீதிமன்ற உத்தரவுப்படி தமிழக அரசின் இந்து அறநிலையத்துறை எடுத்துக் கொண்டுவிட்டது. காலம் காலமாக தங்களிடம் இருந்த உரிமையை மீட்டெடுக்க, பொது தீட்சிதர்கள் நீதிமன்றத்தை நாடும் முயற்சியில் இறங்கியிருக்கிறார்கள். இந்தச் சூழலில் நிர்வாகத்தை அரசு எடுத்துக்கொண்ட பிறகு ஆலயம் எப்படியிருக்கிறது?**

அன்று பிரதோஷம். வழக்கத்துக்கு மாறாக சற்று தாமதமாகத்தான் உச்சிக்கால பூஜை. தரிசனத்தை முடித்துவிட்டு அவசர அவசரமாக வெளியேறிக் கொண்டிருந்த கணேஷ் என்பவரைத் தடுத்து நிறுத்தி பேச்சு கொடுத்தோம். ''அரசு நிர்வாகத்தை எடுத்த பிறகு பெரிய மாறுதல் என்று எதுவும் கிடையாது. ஆறு கால பூஜை அந்தந்த நேரப்படி சரியா நடக்குது. மற்றபடி அரசு எதுக்கு இதில் திடீர்னு தலையிடணும் என்று புரியவில்லை. தீட்சிதர்களுடன் பேச்சுவார்த்தை நடத்தி குறைகளைச் சரி செய்திருக்கலாமே'' என்றார். உள்ளூர் பக்த பேரவை உறுப்பினராம் இவர்.


* கணேஷ்


* சுதாகர்


* சந்திரா

ஆனால், இந்து ஆலயப் பாதுகாப்புக் குழு அமைப்புச் செயலாளர் சுதாகர் சீறிவிட்டார். ''மதச் சார்பற்ற அரசு என்று சொல்லும் அரசு, இந்து ஆலயங்களில் மட்டும் தலையிட்டு அக்கிரமங்களைச் செய்கிறது. நீண்ட காலமாக ரகசியமாக ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு திட்டமிட்ட சதி காரணமாகத்தான் இந்த ஆலயம் அரசால் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இனி அதிகாரிகளும் அரசியல்வாதிகளும் வைத்ததுதான் சட்டம். கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் ஆட்சியில் எல்லாம் நடக்கும். நாங்கள் விடமாட்டோம். போராடுவோம். ஆலயத்தை அரசிடமிருந்து மீட்டெடுப்போம்.''

ஆலயத்தை அரசு எடுத்துக் கொண்டதற்காக, பாராட்டி வெற்றிவிழா கூட்டங்கள் சிதம்பரத்தில் நடந்து கொண்டிருக்கின்றன. அதே சமயம் தீட்சிதர்களுக்கு ஆதரவாகவும் உண்ணாவிரதம், பிரசாரங்களும் நடக்கின்றன.

ஆலயப் பாதுகாப்புக் குழுவைச் சேர்ந்த மற்றொரு செயல் உறுப்பினரான குருவாயூரப்பன், ''பொதுவாகவே, இந்து மதத்தினரை மதம் மாற்றவும், இந்து ஆலயங்களைச் சின்னாபின்னப்படுத்தவும் ஒரு கும்பல் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருக்கிறது. அது யாரென்று ஆள்வோருக்கும் தெரியும். இங்குள்ள சில துரோகிகளை கைக்குள் போட்டுக் கொண்டு அவர்கள் தங்கள் நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்கிறார்கள்'' என்கிறார் அவர்.

குறிஞ்சிப்பாடியைச் சேர்ந்த சந்திரா ரெகுலராக ஆலயத்துக்கு வருபவர். அவரிடம் இதுகுறித்து கேட்டபோது, ''அப்படியொன்றும் பெரிய வித்தியாசம் எதுவும் தெரியவில்லை. ஆனால், நடராஜர் பெரு

சிதம்பரம் தீட்சிதர்கள்

# "யாருக்கும்

மானுடனே பூமிக்கு வந்தவர்கள் தீட்சிதர்கள். அவர்களை ஓரம் கட்டுவதற்குப் பதிலாக, அவர்களின் ஒத்துழைப்பையும் பெற்று நிர்வாகத்தைச் சரி செய்திருக்கலாமே!'' என்கிறார். ஆனால், அரசு எடுத்துக்கொண்ட பிறகு நடராஜர் தரிசனம் சுலபமாகியிருக்கிறது என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள். ''முன்பெல்லாம் பொன்னம்பல மேடை மீது ஏறி தரிசனம் செய்ய தீட்சிதர்கள் ஐம்பது, நூறு என்று பணம் வாங்குவார்கள். இப்போது ஒரு பிரச்னையும் இல்லை. சுலபமாக சபை மீது சென்று திருப்தியுடன் தரிசனம் செய்கிறோம்'' என்கிறார் சந்திரமோகன்.

அரசு கையில் நிர்வாகம் போனால், வரிசையில் நின்றுதான் தரிசனம் என்று பல கட்டுப்பாடுகள் வரும் என்று உள்ளூர் பக்தர்கள் கவலைப்படுகிறார்கள். ''நாங்க, இப்பொழுது நினைத்தபோது வந்து ஸ்வாமியை தரிசனம் செய்துவிட்டுப் போகிறோம். எதிர்காலத்தில் காசு கொடுத்தால்தான் தரிசனம் என்று கெடுபிடிகள் வந்துவிட்டால் என்னாவது?'' என்று கேட்கிறார் உள்ளூர் தமிழாசிரியரான விநாயகம்.

தீட்சிதர்கள் கொஞ்சம் மிரண்டுதான் போயிருக்கிறார்கள். சட்டப்படி இந்தப் பிரச்னையை அவர்கள் எடுத்துப் போராடினால் பிரச்னை ஒன்றுமில்லை. ஆனால், சென்னையில் தீட்சிதர்கள் ஜெயலலிதாவைச் சந்தித்தது, அரசு மட்டத்திலும், தி.மு.க வட்டாரத்திலும் மேலும் எரிச்சலை உண்டாக்கியிருக்கிறது. ''அரசு எடுத்துக் கொள்ளட்டும். ஏனென்றால் பல திருப்பணிகள் நடக்க வாய்ப்புண்டு. நிதி நிர்வாகம் சீர்ப்படும். தொன்மையான இந்த ஆலயத்தின் புனிதத்தன்மை கெடாமல் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு அரசுக்கு உண்டு. சுற்றுலாப் பயணிகள் அதிகம் வரும் ஆலயம். எனவே சுற்றுச்சூழலை தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அரசியலும், அரசியல்வாதிகளும்



**FOLLOW UP**



* ஆறுமுகச்சாமி

# எதிரியல்ல''

நிர்வாகத்தில் நுழையக் கூடாது'' என்கிறார் அண்ணாமலை பல்கலைக்கழக மாணவியான சனம்.

அரசு நிர்வாகத்தை எடுத்துக் கொண்ட பிறகு, ஆலயம் சுத்தமாகப் பராமரிக்கப்படுவதாக எல்லோருமே சொல்கிறார்கள். இந்தப் பிரச்னை இவ்வளவு பரபரப்பான திருப்பங்களுடன் நடப்பதற்குக் காரணம் ஆறுமுகச்சாமிதான் என்கின்றனர் உள்ளூர் மக்கள். கடவுள் பக்தி இல்லாத கும்பல் அவரைப் பயன்படுத்திக்கொள்கிறது என்ற குற்றச்சாட்டும் உண்டு.


* திருவாரூரப்பன்


* குப்புசாமி தீட்சிதர்


* விநாயகம்


* சனம்

''சிவபெருமானால் ஸ்தாபிக்கப்பட்ட மற்ற சிற்சபைகளில் வழிபாடுகள் எப்படி நடக்கிறதோ அப்படித்தான் இங்கு நடக்க வேண்டும். ஆனால், தீட்சிதர்கள் தனி ராஜ்யம் நடத்தினர். அது முடிவுக்கு வந்தது. எனவேதான் ஆலயத்தை அவர்களிடமிருந்து மீட்கப் போராடினேன். எனக்கு நாத்திகர்கள் துணை செய்திருக்கலாம். அதுவும் நடராஜப் பெருமான் விருப்பமே. ஆனால் கடவுள் பக்தியில்லாதவர்கள் கூட இணைந்து செயல்படமாட்டேன்'' என்கிறார் ஆறுமுகச்சாமி. ஒரு காலத்தில் தீவிர அ.தி.மு.க. ஆதரவாளராக இருந்து துறவியாகியிருக்கிறார் ஆறுமுகச்சாமி.

''வழக்கு நீதிமன்றத்தில் இருப்பதால் எதுவும் சொல்ல விரும்பவில்லை. ஆனால் ஒன்றை மட்டும் தெளிவுபடுத்துகிறேன். நாங்கள் எந்த ஜாதிக்கும், மதத்துக்கும் எதிரியல்ல. இங்கு எல்லோரையும் அனுமதித்தோம். தவிர தமிழுக்கு விரோதிகள் போல் எங்களைச் சித்திரித்தது அந்தப் பெருமானுக்கே அடுக்காது. பூஜை விஷயங்களெல்லாம் இன்னமும் எங்கள் கட்டுப்பாட்டில்தான் இருக்கின்றன'' என்கிறார் குப்புசாமி தீட்சிதர். ''உயர்நீதி மன்றத்தில் விவகாரம் இருக்கும்போது, அரசு ஏன் அவசரப்பட்டு நிர்வாகத்தை எடுத்துக் கொண்டது?'' என்று நிர்வாக அலுவலர் சிவகுமாரிடம் கேட்டோம். ''நாங்கள் அவசரப்படவில்லை. ஆனால், காணிக்கை போட வசதியாக உண்டியல் வைத்திருக்கிறோம். மடப்பள்ளி வெளிகால்வாய்களைச் சுத்தம் செய்து ஆலயத்தைச் சுத்தமாக வைத்திருக்கிறோம். ஆலய உள்துறை என்று சொல்லப்படும் பூஜை, கட்டளைகள், நகைகள், விவகாரத்தை நாங்கள் இதுவரை எடுக்கவில்லை'' என்றார் அவர்.

**''பொன்னம்பல மேடை ஏறி தரிசனம் செய்ய தீட்சிதர்கள் பணம் வாங்குவார்கள். இப்போது பிரச்னையில்லை''**

பொது தீட்சிதர்கள் செயலர் சென்னையில் இருப்பதால் அரசால் உள்துறை நிர்வாகத்தை எடுக்க முடியவில்லை. இதற்கிடையில் சு.சுவாமி வழக்கில் இணைந்து கொண்டது தீட்சிதர்களுக்கு பிடிக்கவில்லை. ''ஜாதி அரசியல் என்று திசை திருப்பப்படும்'' என்கிறார்கள். அதே சமயம் அரசு எடுத்துக் கொண்டதற்கு நீதிமன்றத்தில் தடை கிடைக்கும் என்று உறுதியாக நம்புகிறார்கள் தீட்சிதர்கள்.

நடப்பதைப் பார்த்துக் கொண்டு இதழோரப் புன்னகையுடன், தனது ஆனந்த நடனத்தைத் தொடர்கிறார் சிவபெருமான்.

**- ஸ்ரீநி**

படங்கள் : **ராமகிருஷ்ணன்**




சிரிப்பின் காரணம்!
''என்ன, உங்க ஆஸ்பத்திரியில சிரிப்பும், சந்தோஷமுமா ஒரே கொண்டாட்டமா இருக்குது?''
''ஒரு வாரமா டாக்டர்கள் ஸ்டிரைக்.''
- ஜீ.வி. சுபாஷ், சேலம்-1.

திரும்பிய பக்கமெல்லாம் ஆஸ்கர் பற்றின பேச்சுதான். எல்லோரும் விருதுகளைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். நாம் அந்த அரங்கத்துக்குள் வந்திருந்தவர்களின் உடைகளைப் பார்ப்போமா?

''விருது வாங்கினால் என்ன மாதிரி ஸ்பீச் கொடுக்கணும்னு தயாராக ஒண்ணும் வரவில்லை என்று நான் சொன்னால் அது பொய். எட்டு வயதிலிருந்தே பாத்ரூமில் ஷாம்பூ பாட்டிலைக் கையில் பிடித்தபடி கண்ணாடியைப் பார்த்துப் பேசிப் பேசி பிராக்டிஸ் பண்ணியவள் நான். இந்த நிமிடம் என் கையில் ஷாம்பூ பாட்டில் இல்லை...'' கண்களில் நீர்மல்க, கையில் ஆஸ்கர் விருதுடன் பேசினார், சிறந்த நடிகைக்கென 'தி ரீடர்' படத்துக்காக விருது பெற்ற கேட் வின்ஸ்லேட்.

''க்ரே கலர் ஸாட்டின் ட்ரஸ்ஸில் கேட் க்ரேட்...'' என ஃபேஷன் பண்டிதர்கள் கூவுகிறார்கள். ஒன் ஷோல்டர் ட்ரஸ்தான் இந்தத் தடவை ஆஸ்கரில் பல ஹாலிவுட் பிரபலங்கள் போட்டிருந்தனர். (நாம் இப்பகுதியில் 2009ல் பிரபலமாகப் போகும் ஸ்டைல் என முன்கூட்டியே சொன்னது தான்.)

சிறந்த துணை நடிகைக்கான விருது வாங்கிய பெனிலோப்



# உலகை மயக்கிய

க்ரூஸ் போட்டிருந்த வொயிட் த்ரட் எம்பிராய்டரி செய்த ஒன் ஷோல்டர் ட்ரஸ் பிரமாதம். ஃப்ரீதா பின்டோ போட்டிருந்த ப்ளூ ட்ரஸ் பரவாயில்லை ரகம். நம்

நாட்டை அதன் பாரம்பர்யத்தைப் பிரதிபலிக்கும் வகையில் பிரத்யேக உடையில் ஃப்ரீதா வந்திருக்கலாம். ஆனே ஹாத்தவே போட்டிருந்த அர்மானி கவுன் எக்ஸலண்ட். ''க்ரிஸ்டல் மற்றும் சீக்வன்ஸில் லேயர் லேயராக வடிவமைக்கப்பட்ட இந்த கவுன் சூப்பர்ப்'' என்கிறார் பிரபல ஃபேஷன் டிஸைனரான ரீத்து குமார்.

''வழக்கமாக ஸ்டைலில் பின்னும் ஆஞ்சலினா ஜோலியின் ட்ரஸ் இம்முறை எடுபடவில்லை. ப்ளாக் கவுனை விட ஜோலி போட்டிருந்த மெகா சைஸ் எமரால்ட் கற்கள் பதித்த கம்மலும் மோதிரமும் அவுட் ஆஃப் தி ப்ளேஸ். மெரில் ஸ்ட்ரீப் போட்டிருந்த க்ரே ட்ரஸ் ஏதோ ஸ்கூல் யூனிஃபார்ம் மாதிரி இருந்தது. சோஃபியா லோரென் போட்ட கவுனில் எதற்கு இத்தனை ஃப்ரில்? ட்ரஸ்ஸின் கலர் வேறு கோல்ட். தங்கச் சிலைதான் நினைவுக்கு வருகிறது. ஏதோ ஃப்ளெமிங்கோ டான்ஸர் போல சோஃபியா ஏன் ட்ரஸ் பண்ணினார்? கேட் வின்ஸ்லெட்டின் தலையில் ஏகமாக ஜெல்லை அப்பியது யார்? சகிக்கவில்லை. பெனிலோப் க்ரூஸ், ஆனே ஹாத்தவே, சாரா ஜெஸிக்கா பார்க்கர், நிக்கோல் கிட்மேன்... இவங்க எல்லாம் ஏன் மணமகள் உடையில், வொயிட் கவுனில் வந்தார்கள். வேறு கலராயில்லை...?'' இப்படி வெளிப்படையான கமெண்ட்கள் ஃபேஷன் மற்றும் மீடியா உலகில்.

உடையைப் பொறுத்தவரைக்கும் ஏகப்பட்ட பாராட்டுகளைப் பெற்றவர்

# ஒன் ஷோல்டர்!

ஜெனிஃபர் அனிஸ்டன். ஃபேஷனிங் ட்ரஸ்ஸில் பளபளத்த ஜெனிஃபரை உர்ரென்று பார்த்துக்கொண்டிருந்தார் ஜோலி. ஜோலியின் இன்றைய காதலரான பிராட்பிட்டின் முன்னாள் மனைவிதான் ஜெனிஃபர்.

ஸ்லம் டாக் மில்லியனர் ஏகப்பட்ட விருதுகளை வாங்கிக் குவிக்க, சர்வதேச சினிமா அரங்கில் இந்திய ஆர்ட்டிஸ்டுகளுக்கும் ஒரு அங்கீகாரம் கொடுத்திருக்கிறது ஆஸ்கர். நாற்பது பேரைக் கொண்ட குழு, மும்பையிலிருந்து அமெரிக்கா பறந்திருக்கிறது. அனில்கபூர் அர்மானிசூட் போட்டிருந்தார். கோ-டைரக்டர் லவ்லீன் டண்டன் சிவப்பு கலர் புடைவையில் மின்ன, ஃப்ரீதா பின்டோ நீல கவுன் அணிந்து ஹாலிவுட் நடிகைகளுக்கு டக்கராக சவால்விட்டுக் கொண்டிருந்தார்.





- லதா சேகர்

# ஆயிரத்தில் ஒருவன்

# 'மாஃபா' பாண்டியராஜன்

● பாலாஜி

இந்தத் தொடரின் துவக்கத்தில் சாதனையாளராக வாழ்க்கையில் உயர்ந்து ஆயிரத்தில் ஒருவனாகப் புகழ்பெற வேண்டுமானால், ஏழு கதவுகளைத் திறக்க வேண்டும் என்று சொல்லியிருந்தேன். இந்தியாவில் இன்று ஒவ்வொரு துறையிலும், வேலை வாய்ப்புகள் எப்படியிருக்கின்றன என்பதையும், உங்களை எப்படித் தகுதிப்படுத்திக் கொண்டால் பல்வேறு துறைகளில் வேலை வாய்ப்பு கிடைக்கும் என்பதையும் பார்த்தோம். இப்போது இந்தத் தொடர் முக்கியமான கட்டத்துக்கு வந்திருக்கிறது. ''எந்தத் துறை என்று தேர்ந்தெடுத்தாகிவிட்டது; அதற்கேற்ப தகுதியையும் வளர்த்துக் கொண்டு விட்டேன். ஆனால் பதவிக்கான நேர்முகத் தேர்வுக்குப் போகும் போது மட்டும் நடுங்கிப் போய் விடுகிறேன். என்னை எப்படித் தயாரித்துக் கொள்வது என்றே தெரியவில்லையே'' என்றுதான் இன்றைய இளைஞர்கள் பெரும்பாலும் என்னைக் கேட்கிறார்கள். உலகப் பொருளாதார உருக்கம் இந்தியாவைத் தாக்கிவிட்ட நிலையில், இருக்கும் வேலைவாய்ப்புகள் பறிக்கப்பட்டு, ஆயிரக்கணக்கானவர்கள் கடந்த சில மாதங்களில் வேலை இழந்திருக்கிறார்கள். அதற்கென்று மனம் தளர்ந்து போகவேண்டிய அவசியமில்லை. நிதித்துறை, மென்பொருள் தவிர மற்ற துறைகள் பலமாகவே இருக்கின்றன. அடுத்த சில மாதங்களுக்குள் நிலைமை சீராகி வேலைவாய்ப்புகள் திரண்டு விடும். மாமன், மச்சான், ஊர்க்காரன், சொந்தக்காரன் என்று சொல்லி வேலை பெற்ற காலங்கள் மலையேறி விட்டன. இப்போது பெரும்பாலான நிறுவனங்கள் எங்களைப் போன்றவர்களிடம் தேர்ந்தெடுக்கும் பொறுப்பைக் கொடுத்து விடுகின்றன.

எனவே இந்த நிலையில் வேலை தேடும் இளைஞர்கள் எழுத்துத் தேர்விலும், நேர்முகத் தேர்விலும் கடுமையான போட்டிகளைச் சந்தித்து வெற்றிபெற வேண்டும். எழுத்துத் தேர்வு என்பது பாடத் திட்டத்தில் இருக்குமாதலால் வெற்றி எளிது. ஆனால் நேர்முகத் தேர்வு சவால்தான்.

நீங்கள் எந்த வேலைக்குச் செல்ல போட்டி நடத்தப்படுகிறதோ அந்தப் பதவியின் நெளிவு, சுளிவு, சவால்களைத் தெரிந்து கொள்ளுங்கள். முதலில் போட்டி நடத்துபவர்களுக்குப் புரிய வைக்க வேண்டிய விஷயம், 'நீங்கள் முழு ஆர்வத்துடன் அந்த நிறுவனத்தில் வேலை செய்யத் தயாராக இருக்கிறீர்கள்' என்பதைத்தான்.

அந்த நிறுவனத்தில்






# வெற்றியை நோக்கி...

வேலை செய்தவர்களைச் சந்தித்து, நிறுவனத்தைப் பற்றி நன்கு தெரிந்துகொள்ளுங்கள். நாளை நேர்முகத் தேர்வு என்றால் இன்று இரவே எல்லாவற்றையும் தயாராக வைத்துக் கொள்ள வேண்டும். செகண்ட் ஷோ பார்த்துவிட்டு மறுநாள் நேர்முகத் தேர்வுக்குச் செல்ல வேண்டாம். காத்துக் கொண்டிருக்கும்போது ஏ.ஸி. அறையில் தூக்கம் வர வாய்ப்புண்டு. நேர்முகப் போட்டியில் பேட்டி காண்பவர்கள் முதல் சில நிமிடங்களில், உங்களைப் பற்றி யூகித்து விடுவார்கள். உடை, சிம்பிளாகவும் அதே சமயம் உங்களைத் தோற்றத்தில் உயர்த்துவதாகவும் இருக்க வேண்டும். டி-ஷர்ட், ஜீன்ஸ் போட வேண்டாம்.

போட்டி அறைக்குள் நுழையும் முன்பு செல்போனை மறக்காமல் அணைத்து விடவும். கேள்வி கேட்பவர்களின் கண்களைப் பார்த்துப் பேசுங்கள். உங்கள் பெயரைச் சொல்லும்போது தெளிவான உச்சரிப்போடு சொல்லுங்கள். இதழோரம் அவ்வப்போது புன்னகை மலரட்டும். கேள்விக்கு எவ்வளவு வேகமாகப் பதில் சொல்கிறீர்கள் என்பதல்ல; எவ்வளவு சரியாகச் சொல்லுகிறீர்கள் என்பதுதான் முக்கியம். தெரியவில்லை என்றால் ஒப்புக் கொள்ளுங்கள். பேட்டியாளர்களுடன் வாதம் வேண்டாம். நேர்முகப் போட்டியின் முடிவில் ''ஏதாவது சொல்ல வேண்டுமா?'' என்று கேட்கப்படும். அப்போது உங்களைப் பற்றி, அனுபவங்களைப் பற்றி அடக்கமாகச் சொல்லுங்கள்.

# பாண்டி 'S BLOG

**நா**ன் பல கூட்டங்களில் பேசியதை இந்தச் சந்தர்ப்பத்திலும் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். வெறும் கல்வித் தகுதியை மட்டும் இப்போதெல்லாம் பார்ப்பதில்லை. ஒரு நிறுவனத்தின் நேர்முகத் தேர்வுக்குப் போன இளைஞர்களை, பத்து பேர் கொண்ட குழுக்களாகப் பிரித்து பொம்மை செய்யச் சொன்னார்கள். அவர்கள் செய்யும்போதே அருகிலிருந்து கவனித்த நிர்வாகிகள், யார் யாருக்கு, குழுவை வழிநடத்திச் செல்லும் தலைமைப் பொறுப்பிருக்கிறது, கூட்டமாக வேலை செய்வதை யார் விரும்புகிறார்கள் என்பதைக் கணித்து, அதன் அடிப்படையில் ஆட்களைத் தேர்ந்தெடுத்தார்கள். உங்களிடம் எந்த மாதிரியான 'கேஷ்' இருக்கிறது என்றுதான் பார்ப்பார்கள். நான் சொல்வது Cash அல்ல Kash.



அதாவது அறிவு (Knowledge), மனோபாவம் (Attitude) திறமை (Skill) பழக்கவழக்கம் (Habit) இந்த நான்கின் கலவை ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமாக இருக்கும். ஒவ்வொரு வேலைக்கும் இந்தக் கலவையின் தேவை மாறுபடும். கல்வி என்பது வேறு; அறிவு என்பது வேறு. எனவே பாடப் புத்தகங்களைத் தாண்டி அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். அறிவுடன் சேர்ந்து திறன்களையும் வளர்த்துக் கொள்ள வேண்டும். மேலும் ஆக்கபூர்வமான மனோபாவம் முக்கியம். அந்த மனோபாவம் இருந்தால்தான் கற்றுக் கொள்ளும் மனநிலை வரும்; நல்ல வேலை வேண்டுமானால் நல்ல நடத்தையும், குணமும் வேண்டும். இதெல்லாம் உங்களிடம் இருக்கிறதா என்பதைக் கண்டுபிடிக்க எங்களிடம் செலக்ஷன் யுக்திகள் உண்டு. எனவே இதைப் புரிந்துகொள்ளுங்கள். ஆல் த பெஸ்ட்!

இப்போதெல்லாம் வேலைக்கு எடுக்கப்படும் ஊழியர்களிடம் கற்றுக்கொள்ள, புரிந்துகொள்ள, சாதகமான மனோபாவமும், ஆர்வமும் இருக்கிறதா என்பதைத்தான் முக்கியமாகப் பார்க்கிறார்கள். ''மாறுதலுக்குத் தயாராக இருக்கிறாரா?'', ''குழு மனப்பான்மை இருக்கிறதா?'', ''மனஉறுதியானவரா?'' என்பதையும் பார்க்கிறார்கள். எங்கள் நிறுவனத்தில் சாதாரண ஊழியராகச் சேர்ந்து, இன்று தலைமை நிர்வாகியாக உயர்ந்திருக்கும் பாலாஜி, பல்வேறு நிறுவனங்களுக்காக, ஆயிரக்கணக்கானவர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். பல பதவிகளுக்கு ஊழியரைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் குறித்து ஒரு திட்டமிட்ட செயல்முறை வடிவமைத்த பெருமை இவருக்குண்டு. ''உங்களுக்கு மோட்டிவேஷன் இருக்கிறதா என்பதையே இப்போது நிறுவனங்கள் முக்கியமாகப் பார்க்கின்றன. முதல்கட்டப் போட்டியின் போதே சம்பளம், நிறுவனத்தின் வேலை நேரம், விடுமுறைகள் ஆகியவை குறித்துப் பேசக் கூடாது'' என்று டிப்ஸ் கொடுக்கிறார் பாலாஜி. இந்த வகையில் உங்களை நீங்களே சுயமதிப்பீடு செய்து மார்க் போட ஒரு சின்ன டெஸ்ட் அடுத்த வாரம்.

***(வெளிச்சம் வீசும்)***

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

**அருள்வாக்கு**

# மனிதனும் மிருகமும்!



மிருகம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிராந்தியத்தில்தான் இருக்கும். குளிர்ப் பிரதேசத்துக் கரடி நம் ஊரில் வாழாது. இங்குள்ள யானை அங்கே வாழாது. ஆனால், மனிதன் உலகம் முழுவதும் வாழ்கிறான். அங்கங்கே அவன் தன் புத்தியை உபயோகப்படுத்தித் தனக்குச் சாதகமாகச் சூழ்நிலையைச் செய்து கொள்வான் என்று பகவான் இப்படி விட்டிருக்கிறார்.

இந்த உயர்ந்த புத்தியை வைத்துக் கொண்டு மனிதன் கஷ்டப்படுகிறான்; துக்கப்படுகிறான். பிறந்து விட்டதனாலே இவ்வளவு கஷ்டம். இனிப் பிறக்காமலிருக்க வேண்டுமானால் என்ன பண்ணுவது? பிறப்புக்குக் காரணம் என்ன? நாம் ஏதோ தப்புப் பண்ணியிருக்கிறோம். அதற்குத் தண்டனையாக இத்தனை கசை அடி வாங்க வேண்டும் என்று விதித்திருப்பதால் இந்த உடம்பை எடுத்து அவற்றை வாங்குகிறோம். பத்து அடி ஆன பிறகு இந்த உடம்பு போய்விட்டால் இன்னோர் உடம்பு வருகிறது. பாக்கி அடியை அந்த உடம்பு வாங்குகிறது. காமத்தினாலே, பாபத்தைச் செய்வதனாலே ஜனனம் வருகிறது. காரியம் எதுவும் பண்ணாமல் இருந்து விட்டால் ஜனனம் இல்லை. கோபத்தினாலே பல பாபங்களைச் செய்கிறோம். கோபத்துக்குக் காரணம் ஆசை, காமம். முதலில் காமத்தை, ஆசையை ஒழிக்க வேண்டும்.

பற்றை நிறைய வளர்த்துக்கொண்டு காரியம் செய்யாமல் இருப்பது என்றால் முடியாது. பற்றை ஒழித்துவிட்டால் பாவம் செய்யாமல் இருக்கலாம்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

வியாழக்கிழமை சின்னமனூர் சந்தை. என்றுமில்லாமல் அன்று ரோட்டில் ஒரே கூட்டம். 'நல்ல நாள்' சந்தை மாதிரி நல்ல கூட்டம். வண்டி மாடுகள், ஆடுகளை மந்தை மந்தையாக ஓட்டிக்கொண்டு போகும் கூட்டம். கோழி, சேவல் என்று கொச்சக்கயிற்றில் காலைக் கட்டி தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு, தொங்கு, தொங்கு என்று ஓட்டமும், நடையுமாக நகருவார்கள். காருக்குக் காத்திருக்கும் கூட்டம் என்று ஒரே ஜனக்காடு! 'எப்படா பஸ் வரும்' என்று அரசமரத்து நிழலடியிலும், டீக்கடைப் பந்தலிலும் ஜனங்கள்!

அடிக்கடி கழுத்தை மட்டும் வடக்கே திருப்பிப் பார்த்தார்கள். சத்தம் வரும். தூரத்தில் ஒரு உருவம் திரளும். கடைசியில் அது லாரியாகவோ, வேனாகவோ வேகமெடுக்கும். எரிச்சலோடு திரும்புவார்கள். பத்துக்கு வரவேண்டிய 'பாத்துமா'வையும் காணோம். பத்தேகாலுக்கு வரவேண்டிய 'சாமிநாதனை'யும் காணலெ. ஒன்றிரண்டு 'பி.ஆர்.சி.' மட்டும் நிற்பது மாதிரி வேகத்தைக் குறைத்து, ஒரு பாவ்லா காட்டிவிட்டு விருட்டென்று கிளம்பிவிட்டது.

சந்தைக்குப் போவது என்பது ஒரு சாக்கு.



# காற்று வரும் பருவம்!

பாரதிபாலன்

## 7

விடிவதற்கு முன் வயக்காட்டுப் பக்கம் ஓடி, ஒழவு, நடவு, காவல் என்று இருட்டவும் ஒய்ந்து போய்த் திரும்பும் கூட்டம் 'உசுரா' உலாவுவது இந்தச் சந்தை நாளில்தான். சூத்தக் கத்தரிக்கா ரெண்டு கூறு. ஒட்டைத் தக்காளி ரெண்டு கூறு. சல்லிசா கிடைக்கின்ற காய்கறிகள், கொஞ்சம் வாங்கிக் கொள்ளும். மற்றபடி சினிமாவுக்குப் போவதுதான் உசிராய் இருக்கும். கையில் காசு இருந்தால் புருஷனும் பொண்டாட்டியும் சேர்ந்து 'பிரபாத் ஸ்டுடியோ'வில் ஒரு போட்டோ பிடிப்பது. மற்றபடி தெருவில் பரத்தி வைத்திருக்கும் ரவிக்கை, உள்பாவாடை, கலர் பனியன் இவற்றைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துவிட்டு, விலை கேட்பது. விலை சொன்னதும் ''கொள்ளத் துட்டுல்லெ சொல்றான். அடுத்த வாட்டி பாக்கலாம்'' என்று நகர்வது.

கோவிந்துவின் அக்காவும், மாமாவும் ஊரில் இருந்து வருகிறார்கள். அம்மாதான் சந்தைக்குப் போகச் சொன்னது. 'எல்லாம் உண்டனா வாங்கி வா' என்று பெரிய பையாகத் தூக்கிக் கொடுத்தது. கொள்ள நேரமா பஸ் ஒன்றையும் காணோம். பேசாமல் வாடகைக்கு சைக்கிள் பிடிக்கலாமா? யோசித்தான். அப்போதுதான் ஊரடித் தோட்டத்துச் செட்டியார் மாட்டு வண்டி வந்தது.

செட்டியார் முளக்குச்சியைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பஞ்சுவின் அப்பா மம்பட்டியான்தான் வண்டியைப் பத்திக் கொண்டு வந்தார். வண்டியை நிறுத்தி, ''வர்றீகளா தம்பி?'' என்றார் செட்டியார். கோவிந்து தயங்கினான். ''வாங்க இந்த சந்தைத் தெடுவுலெ காரு ஏறவா முடியும்?'' கோவிந்து தயங்கிக் கொண்டே ஏறினான். அவன் ஏறவும் வண்டியை விரட்டினார்.

வண்டி வேகமெடுத்திற்று. செங்குளம் தாண்டி சின்னத்துரை தோட்டத்தைத் தொட்டது. கூடாரமாகப் புளியமரங்கள். இருள் விழுந்த மாதிரி இருந்தது. ஒன்றிரண்டு லாரிகள் அங்கு வரும்போது விளக்குப் போட்டு விடும். அத்தனை இருட்டு. சிலையம்பட்டியில் இருந்து சின்னமனூருக்கு வருவது சுகம். அதுவும் நடந்து வரவேண்டும். சின்னத்துரை தோட்டம் குளத்தங்கரையில் தொடங்கி, கண்ணம்மாள் கோயில் வரை நீண்டிருக்கும். குளுகுளுவென்று மனசு நிறைந்துவிடும். கண்ணம்மாள் கோயில் தாண்டி முடக்குச் சாலை வந்தது. வண்டி நின்றுவிட்டது.

''எறங்குங்க. பதனீ குடிக்கலாம்'' என்றார் செட்டியார். பசேலென்ற பயிர்களைத்

தொட்டு விழுந்து, புரண்டு காற்று எழும்பி வந்தது. ஜில்லென்று இருந்தது. செட்டியாரைப் பார்த்ததும் பதனீக்காரன் எழுந்து கொண்டான். ''ஏலெ மட்டையைச் சுத்தம் பண்ணிவிட்டு அவருக்கு மூணு சொம்பு ஊத்துடா'' என்றார். கோவிந்து செட்டியாரைப் பார்த்தான். ''சாப்புடுங்க தம்பி. இதா நானும் வரேன்'' என்று புளிய மரத்துக்குப் பின்னாடி போனார். பதனீர் வந்தது. அமிர்தமாக இருந்தது. செட்டியார் வந்து, ''ஏலெ சுண்ணாம்பு கலவாதது இருக்குதாடா?'' என்றார். அவன் மறைத்து வைத்திருந்த ஒரு பாட்டிலை எடுத்துக் கொடுத்தான். அதை இடது கையால் தூக்கிப் பார்த்தார். ''நீச்சத் தண்ணி கெணக்காலெடா இருக்கு'' என்றார்.

''குடிச்சுப் பாருங்கையா. ஒரு மரத்து சமாச்சாரம். குடிக்காமலெ குத்தம் சொன்னா?''

''பாத்தாலே வவுசி தெரியுதேடா''

''குடிங்கய்யா... நல்லா இல்லாட்டி துட்டு வேணாம்''

''அப்படியா?'' என்று வாயில் விட்டவர், முக்கால் பாட்டில் முடியும்வரை எடுக்கவில்லை.

கோவிந்து, செட்டியார் முகத்தைப் பார்த்தான். சுத்தமாக மாறியிருந்தது. இதுவரை இல்லாத முகம். இதுவரை கேட்காத குரல். குரலிலும் பேச்சிலும் கொஞ்சம் வேகம். முகம் விழுந்து விட்டது. லேசாகச் சிவந்தும் விட்டது. கண்ணுப் பட்டை மளமளவென்று துடித்தது. கோவிந்து அவர் முகத்தையே பார்த்தான். அடிக்கடி காறிக் காறித் துப்பிக் கொண்டார்.

''வாய் இருந்தா எதுவேணா பேசலாமாக்கும்?''

''என்ன செட்டியாரே?''

''ஒங்களுக்குத் தெரியாது தம்பி. நீங்க சின்னதா இருக்குமுட்டே இந்த மம்பட்டியான் எங்க தோட்டத்துலதேன் கெடக்கான்.




வடக்குத் தோட்டம் கிழக்குத் தோட்டம் ஊரடித் தோட்டமுண்டு கத்தி வாரான். இவன் அப்பனும் எங்க அய்யாட்டத்தேன் கெடந்தாப்புலெ'' என்று மம்பட்டியானைப் பார்த்தார்.

''..............''

''வேற மாதிரி பேசுறாங்க தம்பி!''

''வேற மாதிரின்னா?''

''ஒரு வடியாப் பேசுறாங்க. இங்கன பக்கத்துலெ இருந்தான்னா ஒத்தாசையா இருக்குமுண்டுதேன் ஒரு குடிசை போட்டுக் கொடுத்தது. அதை வேற மாதிரிப்

பேசுனா...?''

''ம்'' என்று முகத்தைப் பார்த்தான்.

''இவன் சம்சாரம் சீக்குக்காரி. என் னத்தவோ ஆத்தமாட்டாப்புலெ கெடக்கா. பேசுற நாய்களுக்கு அதுவா கண்ணுலெ படும்?''

அவர் குரல் உடைந்துவிட்டது. மம்பட்டியான் இதைக் கேக்காதது மாதிரி, வண்டியைப் பத்தினான். கோவிந்து மேற் கொண்டு என்ன பேசுவது என்று தெரியா மல் எங்கோ பார்த்தான்.

சந்தைப் பக்கம் போனதும் ஒரு மரத்தடி யில் ஒதுங்கியது. கோவிந்து இறங்கிக் கொண்டான். செட்டியாரிடம் விடைபெற்று சந்தைக்குள் நுழைந்தான். நல்ல கூட்டம். தெரு ஓரம் ஒட்டடைக் கம்பு விற்பவன், புளியமரத்தில் ஒட்டடைக் கம்புகளைக் குவித்து வைத்திருந்தான். அதற்குப் பக்கத் திலே 'காவல்' கம்பு. நல்ல மூங்கில். அந்த இடத்தில் மீசை மாயாண்டி தேவர் நின் றிருப்பது தெரிந்தது. தேவருக்குப் பக்கத் திலே அண்ணன் ஜெயபால். கம்புகளை சோதித்துக் கொண்டிருந்தனர். கம்பு சுற்று வதற்காக இருக்கும்.

''அட! கோவிந்தா! வா தம்பி. சந்தைக்கு வந்திங்களாக்கும்'' என்றார்.

''ஆமா'' என்றான். ஜெயபாலும் ஆச் சரியத்தோடு தம்பியைப் பார்த்தான். அதற்கு, 'என்ன திமிர்னு சந்தைக்கெல்லாம்?' என்று அர்த்தம். கோவிந்து அதைப் புரிந்து கொண்டான்.

''அக்கா வருதாம்'' என்றான்.

''அப்படியா!''

''வாங்க தம்பி டீ குடிக்கலாம்.''

''இல்லெ. வர்றேன்'' என்று நகர்ந்தான். நகரும்போதுதான் தேவர் கையைப் பார்த்தான். ஒரு பழைய சாக்குப் பை. அதில் ஏழு எட்டு வெட்டருவாள்கள். திருப் பாச்சிக்காரன் கொண்டு வந்து கடை போட் டிருக்கான் போல. இத்தனை எதற்கு? கோவிந்து மனம் ஏனோ கலங்கிற்று.

**ம**ம்பட்டியான் திரும்பி வரும்போது பொழுது மடங்கிவிட்டது. வாழைக்குள் கும்மிருட்டு. மோட்டார் அறைக்கு மேல், குடைக் கம்பு மாதிரி வளைந்து இருக்கும் இரும்புக் குழாய். அறுபது வாட்ஸ் பல்ப் எரிந்து கொண்டிருந்தது. அதைச் சுற்றிலும் பூச்சிகள். மம்பட்டியான் பையில் கொஞ்சம் காணப் பயறும், தட்டாம் பயறும் இருந்தன. பஞ்சவர்ணம் அதை வாங்கி வைத்தான்.

''எங்க போச்சாம்; இவ்வளவு நேரம்?''

''நீ எப்ப வந்தலா?''

**அப்போ அந்த நபரை 'நாயாளி'ன்னு சொன்னா பொருத்தமா இருக்கும்.**

–சிவ.ராமலிங்கம்
தூத்துக்குடி.





**ஒரு பழைய சாக்குப்பை. அதில் ஏழு எட்டு வெட்டருவாள்கள். திருப்பாச்சிக்காரன் கொண்டு வந்து கடை போட்டிருக்கான் போல, இத்தனை எதற்கு? கோவிந்து மனம் கலங்கிற்று.**

''வெள்ளனமாவே வந்தாச்சு'' என்றாள் பஞ்சவர்ணத்தின் அம்மா.

''எப்படி இருக்குதுக?''

''இந்த ஏழு எட்டு நாளா என் சிண்டைப் புடுச்சிருச்சுக...''

''எதுக்கு?''

''எதுக்கா! வெந்தது போதும் முந்தியிலெ போடுங்குதுக. ஒழவு மாடு புடிக்கப் போகுதுகளாம்.''

''அது ஒண்ணுதேன் கொற. பஞ்சாயத்து போர்டு என்னாச்சாம்?''

''அதையும் பார்த்துக்கிட்டு இதையும் பாக்குற முங்குறான்.''

''கிழிச்சான்.''

''என்னைப் போட்டு நொச்சு எடுத்திட்டதுக. ஒங்கப்பங்கிட்ட கேளுமிண்டாக்கா என்னையப் போட்டு பிடுங்கித் திங்குறா.''

''நீ போனவ விகக்குண்டு வரவேண்டியதுதானெ?''

''எங்கப்பனும் ஆத்தாளும் நொடக்கிட்டதுக. சன்னப்பய வைத்தியமா பாக்குதுக. மனசு கேக்காமத்தேன் அங்குனக்குள்ள கெடந்தேன். அதுகளுக்கு தண்ணிய வெந்நிய வெச்சுக் கொடுத்துக்கிட்டு...''

''நாங்க எல்லாம் மனுஷனா தெரியலெவ.''

''இவ இருக்காள்லெ...''

பஞ்சவர்ணம் அப்பனையும், ஆத்தாளையும் ஒரு பார்வை பார்த்துக் கொண்டாள்.

''பின்ன புள்ளய கொடுத்துப்பிட்டு, இப்படி வெடப்பா நின்னா. ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆச்சுண்டா.''

''ஒன் தம்பிதானெ?''

''ஆமா தம்பி! என்னையே சங்க நெறிக்க வாராங்குறேன். அதுக்கு அம்புட்டு வெலம்.''

''குடிகாரப் பய! நாங் காட்டி அவனைக் காலை இணுங்கி விட்டிருப்பேன் இணுங்கி...''

''நீங்க எதுக்கு இங்க சண்டை கட்டுதீய. கஞ்சி ஊத்தி வெக்க வாப்பே'' என்று இடையில் புகுந்தாள் பஞ்சவர்ணம்.

''எனக்கு வேண்டாம். செட்டியாரய்யா புரோட்டாவும் சால்னாவும் வாங்கிக் கொடுத்தார். ஒரே புளிச்ச ஏப்பமா வருது.''

''அப்ப நொடக்க வேண்டியதுதேன்.''

மம்பட்டியான் ஒரு கோணிச் சாக்கை மடித்துத் தலைக்குப் போட்டுக் கொண்டார். அது முதுகு, பின்புறம் என்று இறங்கி முழங்கால் வரை தொங்கியது.

''சரி நீ போப்பே'' என்றாள். மம்பட்டியான் நடந்தான். வரப்பு வழியே நடந்து கத்தரியைக் கடந்து, வேலிப் பக்கம் போனான். வேலியைத் தாண்டி களத்து மேட்டில் ஏறிவிட்டான். அதுவரை தெரிந்தது. அதன்பின் ஒன்றும் தெரியவில்லை. பஞ்சுவின் அம்மா 'தூமையக்குடிக்கு மக்கா' என்று வைது விட்டு சேலைத் தலைப்பால் மூக்கை உறிஞ்சி சிந்தினாள். பின் ''அந்த விளக்கைக் கொறச்சு விட்டு நொடக்கும்லா'' என்று ஒரு ஓரமாகப் படுத்துவிட்டாள். இன்னொரு ஓரம் பஞ்சுவின் தம்பி காலை அகட்டி கையைப் பரத்திக் கிடந்தான். பஞ்சுவும் வந்து பாயைப் போட்டாள். அவளால் படுக்க முடியாது. படுத்தாலும் தூங்க முடியாது. நடுச்சாமத்தை நோக்கி அவள் மனம் நகர்ந்தது.

**(காற்று வீசும்)**

# காதைக் கொடுங்க



# குழப்பத்தில் பாலு!

**தொ**குதி மறு சீரமைப்பு, பல முக்கிய தமிழக அரசியல்வாதிகளுக்கு தர்மசங்கடத்தை உருவாக்கியிருக்கிறது. அவர்களில் இருவர், தி.மு.க. மத்திய அமைச்சர்கள் ராஜாவும், டி.ஆர். பாலுவும். இதுவரை தாழ்த்தப்பட்டவர்களின் ஒதுக்கீடாக இருந்த பெரம்பலூர், பொதுத் தொகுதியானதில் ராஜாவுக்குப் பிரச்னை. தி.மு.க.வின் மேலிடத் தலைவரின் இதயத்தில் இடம்பெற்றிருக்கும் ராஜா, தமிழ்நாட்டில் எங்கே நிற்க விருப்பம் தெரிவித்தாலும் கட்சி வளைந்து கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை. தாழ்த்தப்பட்டவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் காஞ்சிபுரம், திருவள்ளூர் ஆகியவை அவரது பரிசீலனையில் இருந்தாலும், சொந்த ஊரை விட்டு வர மனமில்லையாம். எனவே பெரம்பலூர் பொதுத் தொகுதியாக இருந்தாலும், போட்டியிட ஆர்வமாக இருக்கிறாராம். அதேபோல தென் சென்னை தொகுதியில் இருந்த புறநகர்ப் பகுதிகள், ஸ்ரீபெரும்புதூர் தொகுதிக்கு மாற்றப்பட்டதில் பாலுவுக்குப் பிரச்னை. முற்றிலும் நகர்ப்புறத் தொகுதியாக மாறிவிட்ட தென் சென்னையில் நிற்பதா அல்லது ஸ்ரீபெரும்புதூருக்கு மாறிவிடுவதா என்ற குழப்பம். சென்டிமென்டலாக ஸ்ரீபெரும்புதூர் காங்கிரஸுக்கு நெருங்கியிருப்பதால், அதை காங்கிரஸுக்குக் கொடுத்துவிட்டு, பாலுவை தென்சென்னையில் போட்டியிடும்படி கட்சி சொல்லக்கூடும்.



*"**தி.**மு.க.வுடன் இணைந்து தேர்தலைச் சந்தித்தால் காங்கிரஸும் சேர்ந்து தோற்கும்" என்று பேசி, 'கை' குலுக்க ஜெயலலிதா முனைந்திருப்பது தி.மு.க. வட்டாரத்தைக் கலக்கியிருக்கிறது. சோனியா, கலைஞருடன் உறுதியான நட்பில் இருந்தாலும், காங்கிரஸ் கழன்று கொள்ளும் என்ற வதந்தியைத் தவிர்க்க முடியவில்லை. "காங்கிரஸ் - ஜெ - விஜயகாந்த் கூட்டணி வருது. நாற்பதும் எங்களுக்கே" என்று சொல்லும் காங்கிரஸ்காரர்களும் இருக்கிறார்கள். சோனியாவுடன் மீண்டும் உறவு மலர, மத்தியில் உள்ள மிக உயர் அதிகாரிகள் இருவர் ஜெ.க்கு ஆலோசனை சொல்கிறார்களாம். மீண்டும் ஒரே பழமொழிதான். அரசியலில் எதுவும் நடக்கும்!*

**போ**லீஸ், வழக்கறிஞர்கள் மோதிக்கொண்டபோது, உயர்நீதிமன்ற நீதிபதி ஆறுமுகப்பெருமாள் ஆதித்தனுக்கும் தலையில் அடிபட்டதல்லவா? "அது யதேச்சையாக விழுந்த கல்லால் அல்ல; போலீஸ் லத்தியால் அடித்தது. போலீஸ் அவரை வழக்கறிஞர் என்று நினைத்து அடிப்பதை, ஒரு



போட்டோகிராபர் படமெடுத்திருக்கிறார். அதை சி.பி.ஐ. விசாரணையில் வெளியிடுவோம். ஆனால், அந்த போட்டோகிராபரைத் தேடிப்பிடித்து, சாட்சியத்தை அழிக்க போலீஸ் முயற்சி செய்கிறது" என்கிறார் ஸீனியர் வழக்கறிஞர் ஒருவர்.

**- ஸ்ரீநி**

# உலகை உலுக்கிய புத்தகங்கள்!

**பை**பிள் வாசகங்களுக்கு அடுத்த படியாக இலக்கிய உலகம் அதிகம் எடுத்தாள்வது ஆஸ்கார் ஒயில்ட் எழுத்துகளைத்தான். இதை விநோதம் என்றுதான் அழைக்கவேண்டும். பைபிள் ஒரு நீதிப் புத்தகம். ஆஸ்கார் ஒயில்டோ நீதி, நேர்மை, சத்தியம், புண்ணியம், ஒழுக்கம், நம்பிக்கை, நட்பு, காதல் என்று பிறர் புனிதப்படுத்தும் அத்தனை விஷயங்களையும் பக்கம் பக்கமாகக் கிண்டலடிப்பவர்.

'சிறிதளவு நேர்மை இருப்பது ஆபத்தானது. அதிகபட்ச நேர்மையுடன் இருப்பது உயிருக்கே உலை வைத்துவிடும். நல்ல அறிவுரையை யாராவது உங்களுக்கு வழங்கினால், அதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று முழிக்க வேண்டாம். உடனே, மற்றவர்களுக்கு கொடுத்துவிடுங்கள். நல்ல அறிவுரையை நாம் வைத்துக்கொள்ளக்கூடாது.'

தன்னையும் சேர்த்தேதான் கிண்டலடித்துக்கொள்வார். ''நான் சொல்வதை மக்கள் ஏற்றுக்கொண்டுவிட்டால் உடனே எனக்குப் பயம் பிறந்துவிடும். ஒருவேளை நான் சொன்னது தவறானதாக இருக்குமோ? அதனால்தான் என் கருத்துகளுக்கு இத்தனை வரவேற்பு கொடுக்கிறார்களோ?''

பதிப்பாளர் ஒருவர் ஒயில்டிடம் பேசினார். ''உங்கள் நாடகம் பிரமாதமாக இருக்கிறது. பிரசுரத்துக்கு ஏற்றுக்கொள்கிறேன். உங்களுக்கு ராயல்டி வேண்டுமா அல்லது உடனடித் தொகை வேண்டுமா? ஐந்தாயிரம் டாலர் வரை தர சித்தமாகயிருக்கிறேன். ராயல்டி என்றால் புத்தகம் எவ்வளவு விற்கிறதோ அவ்வளவுக்குத்தான் தரமுடியும்.'' ஒயில்ட் அவர் கைகளைப் பற்றிக்கொண்டார். ''உங்களைப் பார்த்தால் மிகவும் நல்லவராகத் தெரிகிறது. நான் உங்களைப் பரிபூரணமாக நம்புகிறேன். எனக்கு ராயல்டியே போதும்.''

The Importance of Being Earnest, An Ideal Husband, Lady Windermere's Fan என்று ஒயில்ட் எழுதிய ஒவ்வொரு நாடகமும் கொண்டாட்டத்துடன் வரவேற்கப்பட்டது. நாடகம் மேடையேறிய ஒவ்வொரு முறையும் கூட்டம் நிரம்பி வழிந்தது. ''ஒயில்டை மேடையேற்று, நாங்கள் அவரைப் பார்க்கவேண்டும்'' என்று கோஷம் எழுப்பினார்கள். நாடக உலகில் முதல் முறையாக ஒரு எழுத்தாளர் மேடை



# வேண்டாம் அறிவுரை!

■ மருதன் ■

யேறினார். கையசைத்தார்.

ஒயில்ட் எழுதிய ஒரே நாவல் The Picture of Dorian Gray. நாடகங்கள் எழுதியே பழக்கப்பட்ட கை என்பதால் இதையும்கூட, அவன், அவள் என்கிற ரீதியில் நாடகமாகவே எழுதிவிட்டார். பதிப்பாளர் ஒயில்டை அழைத்துப் பேசினார். ''நாவல் வடிவம் இதுவல்ல. இடம், மனிதர்கள், உணர்வுகள் பற்றிய வர்ணனைகள் விலாவரியாக வர வேண்டும்.'' சரி என்று வாங்கிக் கொண்டுபோன ஒயில்ட், உரையாடல்களுக்கு இடையிடையே சில வர்ணனைகளைச் சேர்த்துவிட்டு, இந்தா என்று கொடுத்துவிட்டார். கதையின் உள்ளடக்கத்துக்காக பலத்த சர்ச்சைகளுக்கு அப்போது உள்ளான இந்த நாவல், இன்று உலக இலக்கியமாகப் போற்றப் படுகிறது.




1854ல் பிறந்த ஆஸ்கர் ஒயில்ட், தமது நாற்பத்தாறாவது வயதில் காலமானார். இறப்பதற்கு முன்னால் இரு ஆண்டுகளைச் சிறையில் கழித்தார். ஒழுங்கீனம் தொடர்பான வழக்கொன்றில் அவர் கைது செய்யப்பட்டிருந்தார். சம்பாதித்த செல்வம் அனைத்தையும் தமது இறுதிக் காலத்தில் ஒயில்ட் இழந்திருந்தார். சிறையில் இருந்து வெளி வந்த பிறகும், தம்மைத் தாமே சிறை வைத்துக் கொண்டார் ஒயில்ட். நண்பர்கள், வாசகர்கள், பதிப்பாளர்கள் அனைவரையும் தவிர்த்தார்.

நையாண்டியும் எகத்தாளமும் நிரம்பி வழிந்தாலும், ஒயில்டின் எழுத்துகள் நிச்சயம் எதிர்மறையானவை அல்ல. ஓர் உதாரணம். 'இழந்துபோன என் இளமையை மீட்க எதையும் செய்யத் தயாராக இருக்கிறேன். மூன்று விஷயங்களைத் தவிர. காலை சீக்கிரம் படுக்கையில் இருந்து எழுந்திருப்பது. உடற்பயிற்சிகள் செய்வது. மதிக்கத்தக்க மனிதராக வாழ்வது.'

**மேஷம்:** கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். திருமணம் கைகூடும். கடன் சுமை தீரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். தொழில் வழியில் இடமாற்றம் ஏற்படும். உடன் பிறந்தவர்களால் அனுகூலம் ஏற்படும். வெளியூர் செல்லும் வாய்ப்பு கிட்டும். காரமான உணவுகளைத் தவிர்க்கவும்.

**ரிஷபம்:** வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். பண வசதி பெருகும். வீட்டில் சுப நிகழ்ச்சி கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். வேலையில் உயர்வு ஏற்படும். மனசஞ்சலம் தீரும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். பாகற்காய் போன்ற காய்களை உணவில் சேர்க்கவும்.

**மிதுனம்:** கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. வாகனங்களில் செல்லும் போது கவனம் தேவை. குடும்ப வாழ்வில் அனுசரித்துப் போகவும். திருமணக் காரியம் தாமதம் ஆகும். கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும். கூடா நட்பு பிரச்னைக்கு வழிகாட்டும். வேலை பளு அதிகரிக்கும். வாக்குவாதம் தவிர்க்கவும். எண்ணெய் உணவுகளை குறைத்துக் கொள்ளவும்.

**கடகம்:** திருமணக் காரியம் இனிதே முடியும். கணவன் - மனைவிக்குள் இருந்து வந்த மனக்கசப்பு விலகி குடும்பம் ஒன்றுபடும். வேலையில் இருந்து வந்த சிரமங்கள் விலகி, நற்பெயர் உண்டாகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் ஏற்படும். உணவில் அதிகம் கீரைகளைச் சேர்த்துக்கொள்ளவும்.

**சிம்மம்:** எதிலும் எதிர்ப்பும் போட்டியும் கலந்த வாரம். உடல் நிலையில் பிரச்னை அதிகரிக்கும். அநாவசியமான செலவுகள் ஏற்படும். கொடுக்கல் வாங்கலில் கவனத்துடன் செயல்படுவது நல்லது. சிரமம் அதிகரிக்கும். அவசரப்பட்டு வேலையை விடக்கூடாது. வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை காணப்படும். இனிப்பைக் குறைத்துக்கொள்வது நன்று.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**கன்னி:** திருமணக் காரியம் கைகூடும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். பூமி வாங்கும் யோகம் உண்டாகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல வருவாய் ஏற்படும். நண்பர் / உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். குழந்தைகள் மூலம் மனமகிழ்ச்சி ஏற்படும். வெளியே உணவு சாப்பிடுவதைத் தவிர்க்கவும்.

**துலாம் :** மனஅழுத்தம் அதிகரிக்கும். குழந்தைகளால் மனக்கஷ்டம் வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். உடல் ஆரோக்கியம் சீராகும். நீண்ட காலம் இருந்துவந்த வழக்கு வெற்றி பெறும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். கூட்டாளிகள் மூலம் அனுகூலம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகளின் உணவு விஷயத்தில் கவனம் தேவை.

**விருச்சிகம் :** ஆடை ஆபரணப் பொருட்கள் வாங்குவீர்கள். மனத்தில் சந்தோஷம் மிகுந்து காணப்படும். குழந்தைகள் மூலம்

மனமகிழ்ச்சி ஏற்படும். செலவுகள் கட்டுக் கடங்கி இருக்கும். பணப் பற்றாக்குறை தீரும். திரவ ஆகாரங்களை அதிகம் பயன் படுத்தவும்.

**தனுசு :** சுபகாரியப் பிரார்த்தனை நிறை வேறும். மன அமைதி கிட்டும். கூட் டாளிகள் விட்டு விலகிச் செல்வார்கள். தடைப்பட்டு வந்த திருமணம் கைகூடும். மன உளைச்சல் விலகும். குடும்ப வாழ்வில் இணக் கம் ஏற்படும். நண்பர் உறவினர் மூலம் அனு கூலம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி வெற்றி பெறும். கார உணவுகளைத் தவிர்க் கவும்.

**மகரம்:** எதிர்பார்க்கும் காரியம் நிறை வேறும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். கடன் தொல்லையிலிருந்து விடுபடுவீர் கள். குடும்ப வாழ்வில் அனு சரித்துப் போவது நற் பலனை அளிக்கும். கொடுக்கல் வாங்கலில் மிகவும் எச்சரிக்கை யுடன் இருக்க வேண் டும். நெருங்கிய கூட் டாளிகள் விலகிச் செல் வார்கள். இனிப்பை அள வாகப் பயன்படுத்தவும்.

**கும்பம் :** பத்திரிக்கைகளில் பெயர் வரும். பண வசதி பெருகும். கடன் சுமை தீரும். வேலையில் பளு குறை யும். வர வேண்டிய பாக்கிகள் வசூ லாகும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். நீண்ட கால வழக்கு முடிவுக்கு வரும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். எண்ணெய் உணவுகளைத் தவிர்க்கவும்.

**மீனம் :** உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். உடல் ஆரோக்கி யம் நன்றாக இருக்கும். பூர்வீகச் சொத்து வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். கடன் சுமை தீரும். நண்பர் உறவினர்களிடம் நற்பெயர் கிட்டும். வெளி உணவுகளைக் குறைத்துக் கொள்வது நலம்.

இந்த மாதிரி தினமும் பர்த்டே கேக் கிடைக்குமா?

**01.03.09 முதல்**
**07.03.09 வரை**

**தஞ்சை பரத்வாஜ்**

# அக்கம் பக்கம்

மும்பை தாக்குதலில் உயிருடன் பிடிபட்டு, போலீஸ் பிடியில் இருக்கும் அஜ்மல், தற்போது போலீஸ் கமிஷனர் அலுவலக லாக் அப்பில் இருக்கிறார். அஜ்மலைக் குறிவைத்துக் கொல்ல சாத்தியமிருப்பதால் அவரை ஆர்த்தர் ரோடு ஜெயிலின் 'முட்டை செல்'லுக்கு மாற்றப் போகிறார்கள். ஆர்த்தர் ரோடு ஜெயில் வளாகத்தில் மொத்தம் பன்னிரண்டு பகுதிகள். இவற்றுள் அதிகப் பாதுகாப்பு கொண்ட, நான்காவது பகுதியில் உள்ள முட்டை வடிவ அறையில்தான் அஜ்மலை அடைத்து வைக்கப் போகிறார்கள். இதற்காக சிறைவளாகத்தில் தேடுதல் வேட்டை நடத்தி, பிளேடு முதல் அத்தனை கிரிமினல் சமாசாரங்களையும் மெட்டல் டிடெக்டர் போட்டு சலித்து அப்புறப் படுத்திவிட்டார்கள். அஜ்மலின் அறையில் ஒரு குளோஸ்டு சர்க்கியூட் டி.வி. பொருத்தப்பட்டு 24 மணி நேரமும் ஒரு போலீஸ் குழு கண்காணிக்கும். ஜெயிலுக்குள் இருக்கும் இதர குற்றவாளிகளுள் ஒருவரைக் கொண்டே அஜ்மலின் கதையை முடித் விட முயற்சி நடக்கலாம் எனத் தகவல் இருப்பதால், மும்பை போலீஸ் படு உஷாராகச் செயல்படுகிறது.

*(இதை மையமா வெச்சும் சினிமா எடுப்பாங்களோ?)*



இனிமேல் மகாராஷ்டிராவில் வயதான பெற்றோர்களைப் புறக்கணிக்கும் பிள்ளைகள், கம்பி எண்ண வேண்டியதுதான். 2007ல் மத்திய அரசால் கொண்டு வரப்பட்டு, ஏற்கெனவே 15 மாநிலங்களில் அமலில் இருக்கும் 'பெற்றோர்கள், மூத்த குடிமக்கள் பராமரிப்பு மற்றும் நலன் சட்டம்' இப்போது மகாராஷ்டிராவிலும் கொண்டுவரப்பட்டு விட்டது. அதன்படி, தங்கள் பிள்ளைகள் தங்களை ஒழுங்காகக் கவனித்துக் கொள்வதில்லை என்று 60 வயதான பெற்றோர்கள் புகார் கொடுத்தால், உடனே பிள்ளைகள் மீது வழக்குத் தொடரப்படும். அது நிரூபிக்கப்பட்டால், 3 மாத சிறைத் தண்டனை அல்லது ஐயாயிரம் ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் அனுபவிக்க நேரிடும். பெற்ற பிள்ளைகளுக்கு மட்டுமில்லாமல், தத்துப் பிள்ளைகளுக்கும் இந்தச் சட்டம் பொருந்தும்.

*(பெத்தவங்களுக்குச் சாப்பாடு போடாத பிள்ளைகளுக்கு மாமியார் வீட்டுல சாப்பாடு!)*

# ஜான்சிராணி ஐஸ்வர்யாராய்!

தமிழ்நாட்டுக்கும் கர்நாடகாவுக்கும் நீர்ப் பிரச்னை என்றால், மகாராஷ்டிராவுக்கும், கர்நாடகாவுக்கும் நிலப்பிரச்னை. 'கர்நாடக மாநிலத்தின் பெல்காம், கார்வார், நிபானி ஆகிய மூன்று மாவட்டங்களிலும்

## மகாராஷ்டிரா

உள்ள மராத்தி பேசும் மக்கள் வசிக்கும் சுமார் 865 கிராமங்களை மகாராஷ்டிராவு டன் இணைக்க வேண்டும். மொழிவாரி மாநிலங்கள் பிரிக்கப்பட்டபோது நடந்து விட்ட இந்தத் தவறை இப்போது சரிசெய்ய வேண்டும்' என்று மகாராஷ்டிரா அரசு 2004ல், சுப்ரீம் கோர்ட்டுக்குப் போனது. அப்போது மத்திய அரசு மகாராஷ்டிரா அரசின் கோரிக்கைக்கு அடிப்படை ஏது மில்லை என்று கர்நாடகாவுக்குச் சாதக மான நிலைப்பாட்டைத் தெரிவித் தது. ஆனால், தற்போது கர்நாடகா அரசியலில் காவிக் காற்று வீசுவ தால், மத்திய அரசு தன் நிலைப்பாட்டில் மாற்றம் தெரிவிக்க, அதற்கேற்ப மீண்டும் பிரச்னை எழுப் பியுள்ளது மஹாராஷ்டிரா.

***(காவிரிப் பிரச்னை தீரும்போது, இந்தப் பிரச்னையும் தீரும் என நம்பலாம்!)***

**பி**ரபல இந்தி டைரக் டர் கேதன் மேத்தா, ஜான்சி ராணி லட்சுமி பாய் வர லாற்றை படமெடுக்க முடிவு செய்து அதற்காக ஐஸ்வர்யாராயை புக் பண்ணி, அவருக்கு வாள் பயிற்சி, குதிரை ஏற்றப் பயிற்சிகளுக்கும் ஏற்பாடு செய்தார். அதே நேரத்தில் லட்சுமி பாய் கேரக்டரில் தானே நடித்து, அந்தப் படத்தையும் இயக்கப் போவதாக அறிவித் தார் சுஷ்மிதாசென். ஆனால் ஏனோ தெரியவில்லை. இப்போது அந்தத் திட் டத்தைக் கைவிட்டு விட்டதாக சுஷ் அறி வித்திருக்கிறார். மறு படியும் ஜான்சிராணி படத்தை எடுப்பதில் ஆர்வமாக இருக்கிறார் கேதன் மேத்தா. 'ஐஸ்வர்யா நடிப்பாரா?' என்று கேட்டால் அவரது பதில், ''பொறுத்திருந்து பாருங் கள்!''

*(ஜோதா அக்பர் மாதிரி சர்ச்சை வராமலிருக்கணும்!)*

**- பரத் ராம்**



# தஞ்சாவூர்க்கவிராயர்

எழுத்துக்கூட்டி புத்தகத்தை
வாசிப்பது போல
இலைகளைக் கூட்டி மரங்களை
வாசிக்க வேண்டும்

ஒவ்வொரு கிளையாகப் பிரித்து
வாசிக்க வேண்டும் மரங்களை
ஒவ்வொரு மரத்தையும் அதன்
காயங்களுடன் சேர்த்து வாசி
மரங்களைக் கீழிருந்து மேலாகவும்
மேலிருந்து கீழாகவும் வாசிக்கலாம்

மரங்கள் பூச்சிகளின் பிரபஞ்சம்
நீ பூச்சியாய் மாறினால்
இலைகளின் நுனிவரை செல்லலாம்

இலைகளில் இருப்பவை நரம்புகள்
அல்ல

தாவர லிபி அது
அவ்வளவும் பாட்டுக்கள்
கீர்த்தனைகள்

இலைகளின் பாடலை
காற்று இசைக்கிறது
பூச்சியாகி உற்றுக்கேள்
புரியும் உனக்கும்.

பறவைகளின் பாட்டெல்லாம்
இலைகளிடம் கற்றதுதான்
பாட்டு முடிந்தவுடன்
இலை பழுத்து உதிர்ந்துவிடும்

மரத்தின் அர்த்தத்தை
நிழலில் தேட வேண்டாம்
புரிந்துகொள்வது முக்கியமே அல்ல.
அதெல்லாம் புத்தகத்துக்கு.
இங்கே இளைப்பாறு.

மரத்தின் அர்த்தத்திலே ஐக்கியமாகி
மரத்தை வாசித்தபடி
ஒரு பூச்சிபோல் நகர்ந்துகொண்டே
இரு.

வாழ்க்கை மாறிவிடும் ஒரு
மரப்பிரசாதமாய்

கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

## உங்க மாவட்டத்துல
## 'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எதுங்கோ?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்குங்க?
- அசத்தலா போட்டுகிட்டு அதிரடி பண்ண சேலை.ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்ங்க?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்கண்ணா? என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

**ஆ**மாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

**ஆனா சில கண்டிஷன்ஸ்...**

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார சுற்றுலா
தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 14.3.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**
**கோவை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32



'யா'ரடி நீ மோகினி'யில் நயன்தாராவின் தங்கையாக வந்த சேர நாட்டு சேச்சி 'சரண்யா மோகன்', 'வெண்ணிலா கபடி குழு'வில் ஹீரோயினாக பிரமோஷன் பெற்று ''யான் இப்ப பிஸியா இருக்குன்னு'' என்கிறார்! கல்கிக்காக பேட்டி என்றதும் சம்மதித்து மலையாளம் கலந்த தமிழில் சம்சாரித்தார்.

ஒய்.கே.பி. அகாடமி என்ற டான்ஸ் ஸ்கூலை கேரளாவில் நடத்துகிறார். சென்னையில் கலாக்ஷேத்ரா போன்று கேரளாவில் கலா மண்டபம் என்ற கலாசார அமைப்பு இருக்கிறது. அம்மா தேவி மோகன் அங்கே டான்ஸ் பயின்றவர். அவர்தான் என் டான்ஸ் குரு. பாசிலின் இயக்கத்தில் 'அனியத்தி புறாவு' படத்தில் குழந்தை நட்சத்திரமாக அறிமுகமானேன். தமிழ் சினிமாதான் ஹீரோயினாக உயர்த்தியது.

கேரளாவில் ரசிகர்கள் ஸ்டார்களை திரையில் ரசிப்பதோடு சரி. வெளியில் எங்கேயாவது பார்த்தால்கூட புன்னகையோடு நிறுத்திக் கொள்வார்கள். ஆனால் இங்கே தலைகீழ். ரசிகர்கள் திரை நட்சத்திரங்களை ஆராதிக்கிறார்கள். தங்கள் குடும்பத்தில் ஒருவராகப் பார்க்கிறார்கள். 'வெண்ணிலா கபடி குழு' வெற்றிக்குப் பிறகு என்னை வெளியில் சந்திக்கும் நிறைய பெண்கள், 'எங்க வீட்டுப் பொண்ணு மாதிரி இருக்கேம்மா' என்று என் கையைப் பிடித்துக்கொண்டு சொல்லும்போது சந்தோஷமா இருக்கு. எத்தனை கோடி கொடுத்தாலும் கிடைக்காத சந்தோஷத்தைத் தமிழ் நாடு கொடுத்திருக்கு'' என்று தமிழ் ரசிகர்களை மெச்சினார்.

**அசின், நயன்தாரா வரிசையில் அடுத்தது நீங்கள்தானாமே?**

# வெண்ணிலாவின் ஃபேவரிட் டிஷ்!

''திருவிழாவுக்கும், கலாசாரத்துக்கும் பெயர் போன திருச்சூர்தான் நான் பிறந்த ஊர். வளர்ந்ததெல்லாம் ஆலப்புழாவில். அப்பா மோகன் கிளாஸிகல் டான்ஸர்.

''வம்பு கேள்வின்னாலும் அன்புக்கு தேங்க்ஸ். அசின், நயன்தாரா வரிசையில் நான் வரலாம். ஆனால் கிளாமரில் இல்லை. தமிழ்நாட்டு ரசிகர்கள் என்னை அவங்க

வீட்டுப் பெண்ணாகப் பார்க்கும் போது நான் எப்படி கிளாமரில் வரமுடியும்? பத்மினி சேச்சி ஆடிய பாலக்காட்டுப் பக்கத்திலே அப்பாவி ராஜா பாட்டின் ரீமிக்ஸில், நான் 'யாரடி நீ மோகினி'யில் ஆடினேன். இந்தப் பாட்டு பெரிய அளவில் ரீச் ஆனதால் பத்மினி சேச்சி போல பெயர் வாங்குவதுதான் எனது கனவு.''

**சரி, உங்களுடைய பாலக்காட்டு அப்பாவி ராஜா யார்?**



''எனக்கு வரக்கூடிய கணவர் அப்பாவியா இருக்க வேண்டிய அவசிய மில்லை. என்னோடு சரியான புரிதல் இருக் கிறவரா, என் உணர்வுகளை மதிக்கிறவரா இருக்கணும்.''

**உங்களுக்கும் ரசிகர்கள் கோயில் கட்டினா ஓ.கே.வா?**

''கோயில்னா கும்பிடற சாமிக்குத்தான் கட்டணும். ஆசாமிகளுக்குக் கட்டக் கூடாது. உங்களுக்கு ரொம்ப அவசியம்னா அப்பா - அம்மாவுக்கு மணகல கோயில் கட்டுங்க. நடிகைகளையும் ஒரு பொண்ணா நினைச் சுக்குங்க. அதுபோதும் எங்களுக்கு.''

**சென்னையில் உங்களுக்குக் கிடைக் காத விஷயம்?**

''என்னுடைய ஃபேவரிட் டிஷ் புட்டு. வாழைப்பழத்தை புட்டுல பிசைஞ்சு சாப்பிட்டா அதன் டேஸ்ட்டே தனிதான். சென்னையில் புட்டு எங்கெல்லாம் கிடைக் கும்னு உங்களுக்குத் தெரிஞ்சா சொல் லுங்களேன் ப்ளீஸ்...''

**- ராகவ் குமார்**



பிரிட்டிஷ் ஆட்சியின் காலத்தில் இந்தியாவில் பரவிய நவநாகரிக மோகங்களில் ஒன்று, கிரிக்கெட் விளையாட்டில் மோகம். சென்ற வாரத்தில் சென்னையில் சில தினங்கள் கிரிக்கெட் விளையாட்டுப் போட்டி நடந்தது. அமெரிக்காவையடுத்துள்ள வெஸ்ட் இண்டீஸ் தீவிலிருந்து வந்த கிரிக்கெட் 'கிலாடி'களும், இந்தியாவின் பிரசித்தி பெற்ற கிரிக்கெட் விளையாடிகளும் போட்டியிட்டு ஆடினார்கள். நடுவில் ஒரு நாள், அதாவது ஜனவரி 30ம் தேதி காந்திமகானின் சிராத்த தினம் என்பதை முன்னிட்டு ஆட்டத்தை நிறுத்தி வைத்தார்கள். அன்று ஞாயிற்றுக் கிழமையாதலால் மறுநாள் திங்கட்கிழமை கிரிக்கெட் போட்டியை முன்னிட்டு சர்க்கார் விடுமுறை விட வேண்டும் என்று, நம் பிரதம மந்திரி ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாரிடம் யாரோ ஒரு பெரிய உத்தியோகஸ்தர் போய்ச் சொன்னாராம்.

அதற்கு கனம் ரெட்டியார், ''அடிக்கடி விடுமுறை வேண்டும் என்று வருகிறீர்களே தவிர, 'விடுமுறை வேண்டாம்; வேலை செய்கிறோம்' என்று சொல்வதற்கு ஒரு தடவையாவது வந்திருக்கிறீர்களா? தேசத்துக்காக இந்தச் சமயம் வேலை செய்யாவிட்டால் வேறு எப்போது செய்வது? விடுமுறை கொடுக்க முடியாது!'' என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டாராம்.

கனம் ரெட்டியாரின் பதிலை நாம் பெரிதும் பாராட்டுகிறோம். தேச பக்தியும் சுதந்திரப் பற்றும் உள்ள இந்தியர்கள்

## அமரர் கல்கி

எல்லாரும் "விடுமுறை வேண்டாம்; வேலை செய்கிறோம்!" என்று சொல்லி முன் வரவேண்டிய காலம் இது. அதற்குப் பதிலாக என்ன காண்கிறோம்? எதற்கெடுத்தாலும் விடுமுறை வேண்டுவோரைக் காண்கிறோம். வேலை நிறுத்தம் செய்யும் படி தூண்டுவோரையும் பார்க்கிறோம். இவர்களெல்லாரும் வேண்டுமென்று தேசத்துரோகம் செய்கிறார்கள் என்று

கோயமுத்தூர் ஆலைத் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தார்கள். அவர்கள் அடைந்த லாபம் ஏதாவது உண்டா? ஒன்றும் இல்லை. முதலாளிகள்தான் நன்மையும் லாபமும் அடைந்திருந்தார்கள். ஆலை இரண்டு மாதம் பூட்டிக்கிடந்த போது, ஆலை முதலாளிகளிடம் கையிருப்பிலிருந்த பருத்தியின் விலை ஒன்றுக்கு

# வேலை செய்வோம் வாருங்கள்!

யாரும் சொல்லவில்லை. அறியாமையினாலும், தீர்க்க திருஷ்டியில்லாமையாலும் அப்படியெல்லாம் தவறான காரியம் செய்கிறார்கள் என்று நம் தேசத் தலைவர்கள் சொல்கிறார்கள்.

இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு நடந்திருக்கும் வேலை நிறுத்தம் எதுவும் உருப்படவில்லை. வேலை நிறுத்தம் செய்தவர்களுக்கு நன்மை எதுவும் ஏற்படவில்லை; தீமை உண்டாகியிருக்கிறது. நாட்டுக்கும் பொது மக்களுக்கும் தீமை உண்டாகியிருக்கிறது.



✱ ராஜாஜியுடன் ஓமந்தூரார்

இரண்டு மடங்கு ஏறி விட்டது. ஆகையால் ஆலையில் வேலை நடவாமலும் தொழிலாளிகளுக்குச் சம்பளம் கொடுக்காமலும், முதலாளிகள் கோடிக் கணக்கில் லாபம் சம்பாதித்துவிட்டார்கள்.

ஏற்கெனவே பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு உட்பட்ட இந்தியாவில், எந்தத் தொழிலாளிகள் எதற்காக வேலை நிறுத்தம் செய்தாலும் அது சர்க்காருக்குத் தொல்லை கொடுப்பதாயிருந்தது. அதனால் நியாய அநியாயங்களைப் பாராமல் பொது மக்கள் வேலை நிறுத்தங்களை ஆதரித்தார்கள்; வேலை நிறுத்தக்காரர்களை உற்சாகப்படுத்தினார்கள்; அவர்களுக்கு உதவியும் செய்தார்கள்.

**பொதுமக்கள் ஆதரியாத எந்த வேலை நிறுத்தமும் வெற்றி அடைய முடியாது, நிச்சயமாகத் தோல்வியே அடையும். தொழிலாளிகள் வீணான கஷ்டத்துக்கு உள்ளாவார்கள்.**



ஆனால் அரும்பாடுபட்டுச் சுதந்திரம் அடைந்திருக்கும் இந்தியாவில், எந்த விதமான வேலை நிறுத்தத்தையும் பொது மக்கள் ஆதரிக்கமாட்டார்கள்.

பொதுமக்கள் ஆதரியாத எந்த வேலை நிறுத்தமும் வெற்றி அடைய முடியாது; நிச்சயமாகத் தோல்வியே அடையும். தொழிலாளிகள் வீணான கஷ்டத்துக்கு உள்ளாவார்கள். தேசத்துக்குப் பொதுவான நஷ்டம் உண்டாக்கியதுதான் மிச்சமாகும்.

பார்க்கப்போனால், எல்லாவிதத் தொழிலாளிகளும் பொது மக்களிலே சேர்ந்தவர்கள்தான். அவர்களுடைய பெண்டு பிள்ளைகளும் அப்படித்தான்.

ஆகையால் வேலை நிறுத்தம் செய்வோர் தேசத்துக்கு மட்டும் தீங்கு செய்கிறார்களில்லை; தங்களுக்கும் தீங்கு செய்து கொள்கிறார்கள்; தங்களுடைய பெண்டு பிள்ளைகளுக்கும் தீங்கு செய்கிறார்கள்.

**- கல்கி, 6.2.1949**

## பெண்மொழி

பெண்கள் விஷயம் என்றால் எனக்கு எப்போதுமே பயம்தான். அதிலும் தற்காலத்துப் புதுமைப் பெண்மணிகளுடன் எவ்வித விவகாரமும் வைத்துக் கொள்வது முள்ளின்மேல் நடப்பதைப் போலாகும். அவர்கள் பெண்களாயிற்றே என்று எண்ணி ஏதாவது உபகாரம் பண்ணப் போனால், "பெண் என்றால் என்ன மட்டமோ? எங்கள் காரியத்தை நாங்கள் பார்த்துக்கொள்கிறோம். நீ என்ன உபகாரம் செய்வது?" என்பார்கள். இப்படிச் சொல்லப் போகிறார்களே என்று பேசாமலிருந்தாலோ, "ஏதடா பெண்ணாயிற்றே என்று ஈவிரக்கம் பச்சாதாபம் இருக்கிறதா, பார்! மரம் போல் நிற்கிறான்" என்று திட்டுவார்கள். அவர்களைப் புகழ்ந்து பேசினால், "நீ என்ன எங்களைப் புகழ்வது?" என்பார்கள். குற்றங் கூறினாலோ கண்ணீர் விட்டு அழுது விடுவார்கள்.



**- 'தமிழகத்தில் பெண் தலைமை' கட்டுரையில் கல்கி**




# தமிழரசி என்றொரு புதிர்!

"முடிந்த கதை என்று நினைத்த விஷயம் மறுபடி ஆரம்பிக்குது போல இருக்கு'' என்று தமிழரசி செந்தில் அனுப்பி இருந்த இ-மெயில் பற்றி தன் பெற்றோர்களிடம் சொன்னாள். ''நீ என்னம்மா பண்ணப் போறே?'' என்று கேட்டார் தமிழின் அப்பா.

''மீட் பண்ணிப் பேசறேன்! பார்க்கலாம். நீங்க அவசரப்பட்டு எந்த முடிவும் எடுக்க வேணாம் அப்பா!'' என்றாள்.

மறுநாள் தமிழரசியும், செந்திலும் ஒரு காஃபி ஷாப்பில் சந்தித்தார்கள். எடுத்த எடுப்பிலேயே, ''தமிழ்! இந்த மூணு மாசத்துல நாலஞ்சு பெண் பார்த்தாச்சு! ஏனோ தெரியலை. ஒருத்தரையும் ஓ.கே. சொல்ல எனக்கு இஷ்டமில்லை. நீங்க என்னை முதல் சந்திப்பிலேயே ரொம்ப இம்பிரஸ் பண்ணிட்டிங்க!'' என்றான். மீண்டும் 'ஆண் ஆதிக்கம் அவசியமில்லாதது; பெண்ணுக்கு சம உரிமை தரவேண்டும்; குடும்பப் பொறுப்புகளைப் பகிர்ந்து கொள்ள வேண்டும்; குழந்தை வளர்ப்பில் அப்பாவுக்கும் முக்கிய பங்கு உண்டு' என்பன போன்ற தனது கருத்துகளை எடுத்துச் சொன்னான். அவன் பேசுவதை அமைதியுடன் கேட்ட தமிழரசி, ''எனக்குக் கொஞ்சம் டைம் கொடுங்க'' என்றாள். அடுத்தடுத்து இருவரும் சந்தித்துப் பேசினார்கள். செந்தில், தமிழரசியின் பெற்றோரிடமும் பேசினான்.

இருதரப்பிலும் செந்தில்-தமிழரசி திருமணத்தை நடத்தி வைக்க ஆர்வமாக இருந்தார்கள். தமிழரசி மட்டும்தான் பிடி கொடுக்காமல் நழுவினாள். அவளது

டாக்டர் விஜய் நாகஸ்வாமி

மாமா, அத்தை, சித்தப்பா என ஆளாளுக்கு பேசிப் பார்த்தார்கள். ஆனாலும் தமிழரசி சம்மதம் தெரிவிக்கவில்லை.

செந்தில் நல்ல குணங்கள் கொண்ட, படித்த, நல்ல வேலையில் இருக்கும், நிறைய சம்பாதிக்கும் இளைஞன். அவனை எந்த ஒரு பெண்ணும் திருமணம் செய்துகொள்ள, தயங்காமல் ஒப்புக் கொள் வாள். தமிழரசி, மறுப்பதன் காரணம் என்ன? அவளுடைய மனத்தில் செந்தில் தனக்குப் பொருத்தமானவன் இல்லை என்ற எண்ணம் மிக ஆழமாக விழுந்து விட்டது. குடும்பத்தில் மற்றவர்களுக்கெல்லாம் செந்திலைப் பிடித்துப் போய், அவர்கள் மூலமாக பிரஷர் அதிகரித்தபோது, தன் உணர்வுகளுக்கு மதிப் புக் கொடுக்காத இவர்கள் சொல்வதற்கு நாம் ஏன் கட்டுப்பட வேண்டும் என்ற கோபம்தான் மேலோங்கி யது.

குடும்பத்தினர் தொடர்ந்து வற்புறுத்த, கடைசியில் தமிழரசி, தன் பிடிவாதத்திலிருந்து இறங்கி வரவேண்டியதாயிற்று. ''சரி! எனக்கு முழுமையான சம்மதம் இல்லை என்றாலும், நீங்கள் சொல்வதால் சம்மதிக் கிறேன்'' என்று கூறினாள். தமிழரசி சொன்ன பதிலில் 'எனக்கு முழுமையான சம்மதம் இல்லை' என்ற வார்த்தைகளுக்கு முக்கியத்துவம் தராமல், சம்மதத்தை மட்டும் எடுத்துக்கொண்டு சந்தோஷப்பட் டார்கள். ''என்ன இருந்தாலும் நம்ம பொண்ணு நாம சொல்றதைக் கேக்காம போயிடுவாளா?'' என்று மகளை அணைத் துக் கொண்டார் அம்மா.

வெகு விமரிசையாக நிச்சயதார்த்தம் நடந்து முடிந்த சில நாட்களில், தமிழரசி மெதுவாக, ''இந்தக் கல்யாணம் வேணாம்! என்னை விட்டுடுங்க!'' என்றாள். பதறிப் போனார்கள் அவளுடைய பெற்றோர்கள். 'இவள் மனசில் இப்போதும் இப்படி ஒரு எண்ணம் இருப்பது வெளியே தெரிந்தாலே அவமானம்!' என்று நினைத்தார்கள். தினமும், மகளை உட்கார வைத்து புத்தி மதி என்ற பெயரில் வேப்பிலை அடிக்க ஆரம்பித்தார்கள். ஒரு கட்டத்தில், அவளு டைய அம்மா, ''இந்தக் கல்யாணம் மட்டும் நின்று போனால், நான் தூக்க மாத்திரை சாப்பிட்டுத் தற்கொலை செய்து கொள்வேன்'' என்று பிளாக் மெயில் செய்ய ஆரம்பித் தார். மனம் நொந்து போனாள் தமிழரசி. அம் மாவின் உயிரைக் காப்பாற்றவும், பிறந்த வீட்டுக்கு அவப்பெயர் ஏற்படு வதைத் தவிர்க்கவும், மௌனமாகக் கழுத்தை நீட்டும் முடிவுக்கு வந் தாள்.

**வலுக்கட்டாயத் திருமணத்தை ஜீரணிக்க முடியாமல் கஷ்டப்பட்டாள் தமிழரசி. புகுந்த வீட்டில் கணவன் உட்பட யாருடனும் ஒட்ட முடியவில்லை. ஆபீஸ் வேலையிலும் கவனம் செலுத்த முடியவில்லை.**

நிச்சயதார்த்தத்தைவிட பலமடங்கு விமரிசையாக தமிழரசி - செந்தில் திருமணம் நடந்து முடிந்தது. தமிழரசி தங்கள் வீட்டுக்கு மருமகளாக வந்த மகிழ்ச்சியில் புகுந்த வீடு மூழ்கி இருக்க, தங்கள் பெண்ணை நல்லதொரு இடத்தில் திருமணம் செய்து கொடுத்து விட்ட திருப்தியில் பிறந்த வீடு சந்தோஷப்பட் டது.

வலுக்கட்டாயத் திருமணத்தை ஜீரணிக்க முடியாமல் கஷ்டப்பட்டாள் தமிழரசி. புகுந்த வீட்டில் கணவன் உட்பட யாருடனும் ஒட்ட முடியவில்லை. ஆபீஸ் வேலையிலும் கவனம் செலுத்த முடிய வில்லை. ''என்ன! புதுக்கணவருடன் ஒரே

ரொமான்ஸா? வேலையில் கவனம் பிசகுதே?'' என்று உண்மை நிலைமையை நேரெதிராக நினைத்துக்கொண்டு ஆபீசில் கிண்டல் செய்தார்கள்.

செந்தில் - தமிழரசி இருவருக்குள்ளே ஏற்பட்டுவிட்ட இடைவெளி குறைவதாக இல்லை. தாலி கட்டிய மனைவியைத் தொடக்கூட முடியாதபடி செந்தில் மீது வெறுப்பை உமிழ்ந்தாள். 'ஆசைப்பட்டுக் கல்யாணம் செய்துகொண்டோமே! ஆனால், இவளோ இப்படி



நடந்து கொள்கிறாளே! தன் பெற்றோர்களுக்கு இது தெரிந்தால் ரொம்பக் கவலைப்படுவார்களே!' என்று கவலைப் பட்டான். வெளி உலகுக்கு அவர்கள் கணவன்-மனைவியாகத் தெரிந்தாலும், உண்மையில் அவர்களுக்குள் அப்படிப் பட்ட உறவு இல்லை.

எத்தனை நாள் ஒரு விஷயத்தை மூடி மறைக்க முடியும்? பிரச்னை வெளியே தெரிந்து, குடும்பத்தில் அதிர்ச்சி அலைகளை ஏற்படுத்தியது. என்னிடம் அவர்கள் ஆலோசனைக்கு வந்தபோது, ''இட் இஸ் டூ லேட்!'' என்றேன். இந்த இடம் வேண்டாம் என்று சொன்னபோது, தமிழரசியை நீங்கள் கட்டாயப்படுத்தி, அவள் மனத்தில் ஒரு ஆழமான வெறுப்பை ஏற்படுத்தி விட்டீர்கள். இப்போது என்ன செய்தும், அவர்களுக்குள்ளே இயல்பான உறவினை ஏற்படுத்துவது இயலாத காரியம் என்று அவர்களுக்குப் புரிய வைத்தேன். ஆரம்பத்திலேயே செந்தில் மற்றும் குடும்பத்தினர் பற்றி தமிழரசியிடம் நயமாக எடுத்துச் சொல்லி புரிய வைத்திருந்தாலோ அல்லது அப் போதே மனநல ஆலோசகரது உதவியை நாடி இருந்தாலோ, அவளுடைய எதிர்பார்ப்பு என்ன என்பதைப் புரிந்து கொண்டு அதற்கேற்ப செயல்பட்டிருக்கலாம். தமிழரசியை மனசுக்குப் பிடித்து திருமணம் செய்து கொண்ட செந் திலும் இப்போது வெறுத்துப் போய் விட்டான் என்று புரியவைத்தேன்.

இன்னும் எத்தனை நாள் வாழ்க்கையை இப்படியே ஓட்டுவது? என்ற கேள்விக்கு முடிவு கட்டத் தீர்மானித்த செந்தில், அடுத்து சந்தித்த நபர் ஒரு வக்கீல்.

(அழைப்பு தொடரும்)

**எழுத்து வடிவம்: எஸ்.சந்திரமௌலி**

(இத்தொடரில் இடம்பெற்றுள்ள படத்துக்கும் தொடருக்கும் சம்பந்தமில்லை)

"கையைத் தூக்கவே முடியலை டாக்டர்."

"டோண்ட் வொர்ரி. உங்க சட்டை பாக்கெட்டுல இருந்து நானே ஃபீஸை எடுத்துக்கறேன்."

- சாயம் வெ.ராஜாராமன், சென்னை-47.





"மின் சபதத்தால உங்க ஹீரோவோட கல்யாணம் தள்ளிப் போவுதுன்னியே, ஏதாவது காதல் சமாசாரமா?"

'இல்லே, தன்னோட ஒரு படமாவது 'நாலு வாரம்' ஓடினாத்தான் கல்யாணம்ன்னாரு!"

- வெ.சீதாராமன், சென்னை-5.

# வீடு எங்கே

"உங்க விடு எங்கே இருக்கு?"

"முதல்ல என்கிட்டேதான் இருந்துச்சு. இப்ப அடமானமா பேங்கில் இருக்கு."

- ஆர்.தங்கராஜ், திருப்பூர்.



"உங்கக் கட்சிக்காரங்க 'வெளி நடப்பு' செய்தப்ப நீங்க மட்டும் 'உள்ளே' இருந்தீங்களே... ஏன்?"

"கொஞ்சம் அசந்து தூங்கிட்டேன்!"

- உ.குணசீலபாண்டியன்,
இராஜபாளையம்





"ஏண்டி, உம் மருமவ உனக்குக் கோயிலே கட்டி வெச்சிருக்கான்னு சொல்ற... அப்புறம் என்ன வருத்தம்?"

"என்னை அங்கேயே போகச் சொல்றாளே...!"

- ஆனந்த் சீனிவாசன்



# இருக்கு?

"வெளிநாட்டுப் புலவர்களுக்கு மன்னர் பரிசுகளை வாரி வழங்கறாரே!"

"கவலையே வேணாம்; அவங்க நம்ம நாட்டு எல்லையைத் தாண்டறதுக்குள்ள அதையெல்லாம் 'வழிப்பறி' செஞ்சு, கஜானாவில சேர்க்க ஒரு படையே வைச்சிருக்கார்!"

–வெ.சீதாராமன், சென்னை.



**இந்த வருடத்துக்கான ஜனாதிபதியின் போலீஸ் பதக்கம் பெற்றுள்ளார் சென்னை கமிஷனர் ராதாகிருஷ்ணன். இது அவருக்குக் கிடைத்துள்ள இரண்டாவது ஜனாதிபதி விருது. குடும்பம், பணியின் சவால்கள்... எனப் பல விஷயங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டார்.**

## ரோல்மாடல்

"என் அப்பா கிருஷ்ணசாமி அதிகம் படிக்காதவர். ஆனால் திருக்குறள், பாரதியார் பாடல்களில் ஆழ்ந்த ஞானம் கொண்டவர். அவர்தான் எனக்கு ரோல் மாடல். எங்கள் கிராமமான அம்மாப் பட்டியிலிருந்து நாலு கிலோ மீட்டர் தூரத்தில் மங்கலம் என்ற ஊரில்தான் ஹைஸ்கூல். தினமும் நடந்தே பள்ளிக் கூடம் போய்வருவேன். சிவகாசியில் பி.எஸ்ஸி - கெமிஸ்ட்ரி. அடுத்து விருது நகரில் பட்டப்படிப்பு. மதுரை பல்கலைக் கழகத்தில் கெமிஸ்ட்ரியில் யுனிவர்சிடி ரேங்க். அதுதான் கிராமத்துப் பள்ளியில், தமிழ் மீடியத்தில் படித்த எனக்கு, அகில இந்திய அளவில் சிவில் சர்வீஸ் தேர்வு எழுதுவதற்குத் தேவையான தன்னம்பிக்கையை அளித்தது.

மதுரை பல்கலைக்கழகத்தில் கொடுத்த ஆசிரியர் வேலையை ஏற்றுக் கொள்ளாமல், ராமநாதபுரம் பனைக்குளம் கிராம உயர்நிலைப் பள்ளியில் கெமிஸ்ட்ரி ஆசிரியர் வேலைக்குச் சேர்ந்தேன். காரணம், பள்ளி ஆசிரியராக இருந்தால் கிடைக்கும் கணிசமான ஓய்வு நேரத்தில் சிவில் சர்வீஸ் தேர்வுக்குத் தயார் செய்ய உதவியாக இருக்குமே! டெல்லிக்குச் சென்று சிவில் சர்வீஸ் பரீட்சைக்குப் பயிற்சி பெறும் அளவுக்கு குடும்பத்தில் வசதி இல்லை. காம்படிஷன் சக்சஸ் போன்ற பத்திரிகைகள் உதவியுடன் பரீட்சை எழுதி, மாநிலத்தில் முதல் ரேங்க் பெற்றதால், தமிழ் நாட்டிலேயே பணிபுரியும் வாய்ப்பு எனக்




# அந்த சாகஸ



குக் கிடைத்தது. 1986ல், திண்டுக்கல்லில் ஏ.எஸ்.பி.யாக பணி நியமனம் ஆனேன்.

### சாகச இரவு

1990ம் வருடம் ராமநாதபுரம் எஸ்.பி.யாக இருந்தேன். இலங்கை சென்ற இந்திய அமைதிப்படை திரும்பி வந்த பிறகு, தமிழ்நாட்டில் இலங்கை அகதிகளின் வரத்து அதிகரித்தது. சுமார் 9000 அகதிகளுள் விடுதலைப் புலிகள் உள்ளிட்ட போராளிக் குழுவினரும் அடக்கம்.

ஒரு நாள் காவல் துறை உளவுப் பிரிவைச் சேர்ந்த ஒருவர், ''இன்று ஜீன்ஸ் - டீ ஷர்ட் அணிந்த சில இளைஞர்கள் மண்டபம் முகாமுக்குள் வந்து ஈழத்தின் ஈ.பி.ஆர்.எல்.எஃப். போராளிக் குழுத் தலைவரான பத்மனாபா எங்கே படுத்து உறங்குவார்?'' என்று விசாரித்துவிட்டுச் சென்றதாகச் சொன்னதும், உஷாராகி ரகசியமாக பத்மனாபா தங்கி இருந்த பகுதியில் பாதுகாப்பை அதிகரித்தேன்.

சில நாட்கள் சென்றதும், ஒரு ஞாயிற்றுக் கிழமை இரவு மூன்று ஜீப்களில் வந்த ஆயுதமேந்திய இளைஞர்கள் செக்

# இரவு...

போஸ்ட் ஒன்றில் இருந்த போலீசைத் தாக்கிவிட்டு விரைந்ததாகத் தகவல் வந்தது. உடனடியாக அலர்ட் ஆகி, மண்டபம் முகாம் பாதுகாப்பை அதிகரிக்கவும், எல்லா விளக்குகளையும் போட்டு வெளிச்சம் ஏற்படுத்தவும், தாக்குதல் நடத்த வருபவர்களை ஆயுதங்களுடன் எதிர்கொள்ளத் தயாராகும்படியும் உத்தரவிட்டேன். மாவட்டத்தின் அனைத்து செக் போஸ்ட்களையும் உஷார்படுத்திவிட்டு, மண்டபம் முகாமுக்கு ஒரு போலீஸ் படையை வரச் சொல்லிவிட்டு, நானும் புறப்பட்டேன்.

அதற்குள் முகாமை நெருங்கிவிட்ட போராளிகள் நிலைமையைத் தூரத்தில் இருந்தே பார்த்துவிட்டு, தங்கள் ஜீப்களை வேறு பாதையில் திருப்பி, முகாமின் பின்பக்கம் வழியாக உள்ளே நுழைய முயன்றனர். அது முடியாமல், திரும்பி வரும்போது, ஒரு செக்போஸ்ட் அருகில் மூன்று ஜீப்களையும் மடக்கிவிட்டோம். கடுமையான துப்பாக்கிச் சண்டையில் தாக்குப்பிடிக்க முடியாமல் போராளிகள் சட்டென்று ஜீப்களுக்குள் தாவி, புதர்கள் நிறைந்த பாதையில் தப்பித்துவிட்டார்கள். அன்று அவர்களின் கொலைத் திட்டம் மட்டும் நிறைவேறி இருந்தால், பத்மனாபா மட்டுமின்றி, ஏராளமான அப்பாவி அகதிகளும் கூட பலியாகி இருப்பார்கள். மறக்க முடியாத சாகச இரவு அது.''

### விருதுகள்

கோவை தொடர் குண்டுவெடிப்பு சம்பவத்தையடுத்து அங்கே கமிஷனராகப் பொறுப்பேற்று, சிறப்பாகப் பணியாற்றியதற்காக, அமெரிக்காவின் அகில உலகக் காவல்துறை தலைவர்களின் அமைப்பு 2002-ல் வழங்கிய 'கம்யூனிடி போலிசிங் விருது', காவல் துறை பயிற்சியில் புதுமைகள் புரிந்ததற்காக இருமுறை இங்கிலாந்தின் 'குவீன்ஸ் விருது', '95-ல் தமிழக முதல்வரின் பதக்கம், '99-ல் ஜனாதிபதியின் போலீஸ் பதக்கம் ஆகியவையும் பெற்றுள்ளார்.

தற்போது சென்னை பல்கலைக் கழகத்தில் 'மதவாதமும் தீவிரவாதமும்' என்ற தலைப்பில் பிஹெச்.டி. செய்து வரும் ராதாகிருஷ்ணன், மனைவி ராஜேஸ்வரிக்கு இரண்டு மகன்கள்.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

பொம்மி பொறந்த எடத்துலயும் சுகப்படலை. புகுந்த எடத்துலயும் சுகப்படலை. 'எட்டாவது பொட்டப் புள்ள எட்டிப் பார்த்த எடமெல்லாம் குட்டிச்சுவரு'ன்னு, பொறப்ப பழி சொல்லியே அப்பத்தா கெழவி வாய்க்கரிசி போட்டா. தொட்டியப்ப நாயக்கருக்கு மூணாவது சம்சாரமா கெட்டி வைச்சாக.

மூத்தது ரெண்டும் பொணந்தின்னிக் கழுகுங்க. புதுசா இவ ஏதாவது துணி மணி கெட்டினா சாடைபேசியே பொசுக்கிப் போடுவாளுக. நாயக்கரு இருக்கிற வரைக்கும் அடங்கிக் கெடந்தவளுக, அவரு செத்த அடுத்த நிமிஷமே சீலைய உதறிக் கெட்டிக்கிட்டு வந்துட்டாளுக. இருக்கற வீட்ட பாதிப் பாதியா பிரிச்சுக்கிட்டு, இவள தெறாட்டுல விட்டுட்டாளுக. ஊரணியோரத்துல கெடந்த தகரக் கொட்டகையில இவள உட்கார வைச்சுப்புட்டாளுக. போகமா விளையிற புஞ்ச நஞ்சய அவங்க பங்கு போட்டுக்கிட்டு, பொறம்போக்கு நிலத்த இவளுக்குக் கொடுத்தாக. நமக்குக் கொடுத்து வச்சது இம்புட்டுத்தாம்னு பொம்மியும் பொசுங்கிப் போயிட்டா.

நேத்துதான் குழாய் டவுசரு போட்ட எளவட்டப் பயக ரெண்டு பேரு வந்து இவளைப் பார்த்தாங்க.

''அம்மாமேட்டுல கெடக்கிற அஞ்சு மரக்கா வெதப்பாடு உங்க நிலந்தானாமே... நாங்க விவசாயப் பண்ணையில இருந்துவர்றோம்... சூரியகாந்தி வெத தர்றோம். வெதச்சுப் போடுங்க. வானம் பார்த்த வெவசாயந்தான். அப்பப்ப பெய்யிற மழையில வெளஞ்சுரும்.

# பூப் போல பொண்ணு ஒண்ணு...

அப்பிடி இப்பிடி போனாலும் ஒரு பத்தாயிரம் கை சேரும். வெதைய வாங்கிக்கறீங்களா''ன்னு கேட்டப்ப கொஞ்சம் யோசிச்சா.

போன வாரம் தட்டுத் தடுமாறி வந்த பெத்த அப்பன் கண்ணு மங்கிப் போச்சுன்னு சொன்னப்ப, ஈரக்கொல துடிச்சுதான் போச்சு அவளுக்கு. 'ஏம்ய்யா ஆபரேஷன் பண்ணிக்கிறதுதானே'ன்னு கேட்டப்ப, 'வாங்குன கடனு வழி மறிச்சு நிக்குது. இதுல எம் பொட்டக்கண்ணு ஆபரேஷந்தான் வாழுதாக்கும். கண்ணுக்கிட்ட கையக் கொண்டு போனா ஒரு அஞ்சாயிரம் ரூபாயாவது ஆவும். துட்டுக்கு எங்க போறது'ன்னு சொன்னாரு. சூரியகாந்தியில வர்ற வருமானத்துல அப்பன் பெத்த கடன அடச்சுப்புடலாம்னு சரின்னுட்டா.

**கள பெறக்க, உரம் போடன்னு இருக்கிற பைசாவும்கரைஞ்சு போச்சு. மொத்தமா வரும்னு மனச தேத்திக்கிட்டு குன்னுமணி தங்கத்தையும் அடகு வெச்சு சூரியகாந்தியத் தழைக்க வைச்சா பொம்மி.**

வெதச்சாச்சு. அப்பப்ப அடமழ பெய்யாட்டியும், சாரலா தலைய காமிச்சது பாழாப்போற வானம். ஏதோ சவலப் புள்ளை தவண்டுக்கிட்டு வளர்ற மாதிரி சூரியகாந்தியும் வளர்ந்துச்சு. சல்லிக்காசு செலவில்லன்னு சொன்னவுங்க திரும்ப வயக்காட்டுப் பக்கமே தலவச்சுப் படுக்கல... கள பெறக்க துட்டு, உரம் போட துட்டுன்னு இருக்கிற பைசாவும் கரைஞ்சு போச்சு. மொத்தமா வரும்னு மனசத் தேத்திக்கிட்டு குன்னுமணி தங்கத்தையும் அடகு வெச்சு சூரியகாந்தியத் தழைக்க வைச்சா பொம்மி. பொம்மியோட நிலைமை மண்ணுக்குத் தெரிஞ்சு போச்சோ என்னவோ, செடியில உள்ள ஒவ்வொரு பூவும் பெருமாளு கையில உள்ள சக்கரம் மாதிரி பெரிசா பூத்துச்சுங்க.

ஊரோட கண்ணே பொம்மியோட சூரியகாந்தி மேல. ''ஆத்தி, பருத்தி புடவையா காய்ச்ச மாதிரி என்னவொரு திரட்சி? எம்புட்டு பெரிய பூவு. பொம்மி நாலு சரம் செயினு ஒண்ணு செஞ்சு போட்டுக்கத்தா. வெளையிற வெள்ளாம குடுகுடுப்பக்காரனா உனக்குச் சேதி சொல்லுது.'' வெள்ளையம்மா பெரியாத்தா வெகுளியா பேசுறா. ஊரு கண்ணு பட்டாலும் படும்னு மஞ்சட்டியில கண்ணாம்பு புள்ளி வைச்சு, நட்டு வச்ச கம்புல கவுத்திப் போடுறா பொம்மி.

யாரோ நாலஞ்சு பேரு சூரியகாந்தி தோட்டத்த சுத்திவாரானுக! மஞ்சளும் சிவப்புமா சட்ட வேற போட்டுருக்கானுக. யாருன்னு இவா கேட்கிறதுக்குள்ள பக்கத்துல வந்துடுறானுங்க.

**செ. செண்பகக்கண்ணு**

''இங்க பொம்மிங்கிறது...''

''நான்தேன் என்ன விஷயம்?'' பொம்மி கேட்க, ''யம்மா உனக்கு இந்தச் சூரியகாந்தி வெளச்சல்ல எவ்வளவு பணம் வரும்?'' சிவப்புச் சட்டை கேட்க,

குத்துமதிப்பா கொஞ்சம் உசத்தியே, ''இருபதாயிரம்''ன்னு ஒத்த வரியா பதில் சொல்றா பொம்மி.

''இவரு டைரக்டர் ராஜசேகர். 'கிரிமினல் நம்பர் ஒன்'ங்கிற படம் எடுக்கிறாரு. அதுல ஒரு கனவு சீன். ஹீரோ ஹீரோயின் டுயட். கிராமிய சிச்சுவேஷன். இதுக்குள்ள ஷூட்டிங் வைச்சுக்க கண்ணு முன்னாடியே மிதிபட்டுக் கசங்கி... சின்னா பின்னமாகி...

''அடப்போய்யா நீயும் உன் ஷூட்டிங்கும்... பெத்த புள்ளையா வளர்த்தத குத்திக் குதறப் போறியாக்கும் போய்யா போ... வேற எடத்தப் பாரு...''

''ஏம்மா வலிய வர்ற சீதேவியை உதர்றே... நாளைக்கே சரியான மழ பெஞ்சா வெள்ளாம வீடு வந்து சேராது. அழுகி நாத்தம் புடிச்சுப் போவும். சல்லிக்காசு சேராது. பேசாம பொழக்கிற வழியப் பாரு...'' கூடவே வந்த நாட்டாம நாகராசு பேச...




**'பெண் ஏன் அடிமையானாள்?' நூலில் பெரியார் :**

**வ**ன்மை, கோபம், ஆளுந்திறம் ஆண்களுக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் பெண்களுக்குச் சொந்தமென்றும் சொல்வது வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் புலிக்குச் சொந்தமென்றும், சாந்தம், அமைதி, பேணுந்திறம் ஆட்டுக்குச் சொந்தமென்றும் சொல்வது போன்றதேயொழிய வேறில்லை. நாம் வேண்டும் பெண்ணுரிமை என்பது என்னவெனில், ஆணைப் போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண் மக்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்.

பத்துமாதம் சுமந்து பிள்ளை பெறுகின்ற குணம் பெண்களுக்கு இருப்பதாலேயே பெண்கள் நிலை ஆண்களைவிட மாறுபட்டுவிட வேண்டியதில்லை.

உண்மையான சமத்துவத்துக்கு மதிப்பு கொடுப்போமானால், உண்மையான அன்பு இருக்குமானால், பிள்ளையைச் சுமந்து பெறும் வேலை ஒன்று தவிர, மற்ற காரியங்கள் இருபாலாருக்கும் ஒன்றுபோலவே இருக்கும் என்பது உறுதி.

விரும்புறாரு. அப்படியே ஒரு ஃபைட் சீன். ஒரு முப்பதாயிரம் வாங்கிக்கோ. நாங்க ஷூட்டிங் எடுத்துக்கிறோம்.'' சிவப்புச் சட்டை தொடர்ந்து பேச பொம்மிக்கு கோபம் உச்சிக்கு ஏறுது... இத வளர்க்க இவ பட்டபாடு... ஆடு மாடு பக்கம் வராம காத்த காவலு... உண்ணாம உறங்காம பொட்டு நகையையும் அடகு வைச்ச கொடும... கண்ட துண்டமா இவா

''அடப்பாவி! பெத்த மவள காத்து கருப்பு சீண்டாம கண்ணுக்குள்ள பொத்தி வைச்சு சீவி சிங்காரிச்சு துட்டுக்காகப் பக்கத்து வீட்டுக்காரங்ககூட படுக்க வைப்பியா நீ? அதுக்கு சமந்தேன் இதுவும். போய்யா நீயும் உம் பணமும்.'' சீலைய உதறி செருகிக்கிட்டுப் போற பொம்மிய, டைரக்டரும் நாட்டாமையும் மாத்திரம் இல்ல, சூரியகாந்திப் பூக்களும் மலைக்கப் பாக்குதுங்க. ●

புத்தக விமர்சனம்

# நலம் வாழ...

**நல்வாழ்வுக்கு வழிகாட்டி : சீதா இராமநாதன், விசா பப்ளிகேஷன்ஸ், 16, வெங்கட் நாராயணா சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.35/-**

அறிவுரைகள் அடங்கிய புத்தகம். இளைய பட்டாளத்துக்கு அட்வைஸ்களையும், அர்த்தமுள்ள பயனுள்ள படிப்பினை டிப்ஸையும் அள்ளித்தருகிற நூல். கொஞ்சம் சுவை கூட்டி எழுதியிருந்தால் எல்லா இளைஞர்கள் கைகளுக்கும் தண்டோரா இல்லாமல் தானாகவே போயிருக்கும், நலம் வாழ வழிகாட்டும் இந்நூல்.



**மும்பை 26/11 : ஆர்.நடராஜன், கவிதா பப்ளிகேஷன்ஸ், 8, மாசிலாமணி தெரு, தி.நகர், சென்னை-17. விலை ரூ.75/-**

இந்திய இறையாண்மைக்கு ஊறு விளைவித்த பாகிஸ்தானின் பயங்கரவாதம், மும்பையில் நடத்திய மூன்று நாள் யுத்த களத்தைக் குறித்த ஆசிரியரின் நியாயமான கோபங்களும் தீர்க்கமான விமர்சனங்களும் பாரத நாட்டை ஆள்வோருக்குத் தரும் சாட்டையாக அமைந்திருக்கின்றன. ஒட்டுமொத்த இந்திய மக்களின் ஏகோபித்த கருத்துகளையும் ஆசிரியர் வாயிலாகப் படிக்கும்போது விறுவிறுப்பு கூடுகிறது. புத்தகத்தின் கடைசியில் ஆசிரியர் கோபங்கலந்த கிண்டலோடு எழுதியிருக்கும் கவிதை நூலுக்கு முத்தாய்ப்பாக அமைந்திருக்கிறது.




**ஸ்ரீமத் பாகவத மாஹாத்மியம் : மஹாரண்யம் ஸ்ரீ முரளீதர ஸ்வாமிஜி, சைதன்ய மஹாபிரபு நாமபிக்ஷா கேந்திரா, 15, 7வது அவன்யூ, அசோக் நகர், சென்னை - 83, விலை ரூ.75/-**

'மதுரமுரளி' என்ற தெய்விக மாத இதழில் 'பாகவத பழம்' என்னும் தலைப்பில் வெளிவருகின்ற தொடரைத் தொகுத்துத் தந்துள்ளார் ஆசிரியர். யாருக்கு எந்த விஷயம் சொல்கிறார் என்று படிப்பவர்களுக்கு நிச்சயம் புரிந்துவிடும். வேதம், மஹான்களின் அறிவுரை ஆகியவற்றை ஆசிரியர் தமக்கே உரித்தான நடையில் அளித்திருப்பதால், அவருடைய ரசிகர்கள் அனைவரும் படித்துப் பயன்பெறுவது நிச்சயம்.

**- சகா**



## சுதா சேஷய்யன்

# பிரபஞ்சத்தை ரக்ஷிக்கும் பார்வை!

மிகப் பெரிய அம்பாள் உபாஸகர் மகாகவி பாரதியார். அவர் ஒருமுறை என்ன பாடுகிறார்...? அவர் வாழ்ந்த காலத்தில் ரஷ்யாவில் பெரிய புரட்சி நடக்கிறது. அங்கே புரட்சி வெடித்ததும் இங்கே பாரதி பாட ஆரம்பித்துவிடுகிறார்! அக்டோபர் புரட்சி என்று அதற்குப் பெயர். லெனின் தலைமையில் நடக்கிறது. பாரதியார் ரஷ்யாவுக்குப் போனதில்லை. காசி வரைக்கும்தான் போயிருக்கிறார். ஆனால் ரஷ்யப் புரட்சி என்றதுமே இங்கே பாட ஆரம்பிக்கிறார் :

கொடுங்கோலன் ராவணன் போல்
அரசாண்டான் ஜார் மன்னன்
மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாள்
ருஷ்ய நாட்டினில்
ஆஹா என்றெழுந்தது பார் யுகப் புரட்சி!

மாகாளி பராசக்தி ருஷ்ய நாட்டில் கடைக்கண் வைத்தாளா!?

ருஷ்யப் புரட்சிக்குக் காரணமான லெனின் கூட நினைத்துப் பார்த்திருக்க மாட்டார் - மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்ததால் புரட்சி வெடித்தது என்று! அப் புரட்சியின் தந்தை என்று போற்றப்படும் லெனின், கடவுளை நம்பாத கொள்கையைத்தான் கொண்டிருந்தார்! போல்ஷுவிக் புரட்சியில் மத உணர்வுக்கே இடம் கிடையாது! ஆனால், அதை இங்கேயிருந்து பார்த்துவிட்டு திருவல்லிக்கேணி பாரதி பாடுகிறார் - 'மாகாளி பராசக்தி கடைக்கண் வைத்தாள்' என்று!

இது எப்படி சாத்தியம்? இந்த நாட்டினுடைய அம்பாள் உபாஸகரான பாரதிக்கு அது சாத்தியம். அம்பாளுடைய தீர்கமான பார்வை - **தராந்தோலித தீர்காக்ஷி.** இலேசாகச் சலனப்பட்டுக் கொண்டிருக்கிற கண்கள். அசைந்து கொண்டேயிருக்கிற பார்வை.

நம் மனம் சலனப்படுவதற்கும், அம்பாளுடைய கண்களின் சலனத்துக்கும் வித்தியாசம் இருக்கிறது. அம்பிகையின் கண்கள் சலனப்படுகிறபோது, அடுத்தடுத்து என்னென்ன, என்னென்ன என்று பார்த்துக் கொண்டேயிருக்கின்றன. உலகிலே - சிருஷ்டியிலே எந்த மூலையில் என்ன நடந்தாலும் அவை பார்த்துக் கொண்டே யிருக்கின்றன.

எப்படிப் பார்க்கின்றன என்பதை ஆசார்யார் ஆதிசங்கரர் விவரித்துச் சொல்கிறார்.

கண்களை முழுசாகத் திறந்து வைத்துப் பார்த்தால் அது ஒருவிதமான பார்வை. இலேசாகத் திறந்து வைத்தால் அது ஒருவித மான பார்வை. இமைகளைத் தாழ்த்திப் பார்த்தால் அது வேறுவிதமான பார்வை.

### மோகனப் பார்வை

பெண்களின் பார்வைகள் பலவிதம் என்று சாமுத்ரிகா லட்சணம் கூறியிருக்

ஸ்ரீ லலிதா மூன்றாம் பாகம்

கிறது. அவற்றுக்குப் பெயர்களும் உண்டு. ஒரு பார்வைக்கு விசாலா என்று பெயர். ஒரு பார்வைக்கு கல்யாணி என்று பெயர். மற்றொன்று அயோத்யா. மதுரா, மாயா, போகவதி, விஜயா என்று பலவிதமான பார்வைகளை அம்பிகை தன் பக்தர்கள் மீது பொழிகிறாள்.

அதே சமயத்தில், கல்யாணி என்று ஒரு நகரம் இருந்தது. சாளுக்ய மன்னர்களின் தலைநகரம் கல்யாணி. போகவதி என்று ஒரு நகரம் இருந்தது. அயோத்யா, மதுரா இன்றைக்கும் இருக்கக்கூடிய நகரங்கள். விஜயா என்பதும் ஒரு நகரம். அவற்றில் எட்டு நகரங்களின் பெயர்களைச் சொல்லிக் கொண்டே வருகிறார் ஆசார்யர். அந்தப் பெயர்களுடன் எட்டுவிதமான பார்வைகள் அம்பாளுடைய விழிகளிலிருந்து பிரவிகிக்கின்றன என்கிறார்.

கல்யாணி - கல்யாண தன்மையுடன் மோகனமாகப் பார்க்கக்கூடியவள்.

விசாலா - விசாலமாகப் பார்க்கக்கூடியவள். இப்படியே ஒவ்வொன்றுக்கும் ஒரு விளக்கம் தந்து விஜயா என்பதுதான் கடாக்ஷ பார்வை - கடைக்கண் பார்வை.



கடாக்ஷம் என்பதை கட அக்ஷம் என்று பிரிக்க வேண்டும். கடைசியிலிருந்து பார்ப்பது என்று அர்த்தம். அம்பாள் முழுசாகக் கண்ணைத் திறந்து பார்க்க வேண்டும் என்பதே இல்லை. இலேசாக விழிக்கடை ஓரத்திலிருந்து நோக்கினாலே போதும். கொஞ்சம் யோசித்துப் பார்த்தோமானால், இந்தக் கடைக்கோடி பார்வைதான் எல்லா இடங்களையும் எட்டும். சுற்றிலும் உள்ள பிரதேசங்களை இருந்த இடத்திலிருந்தே பார்த்து அருள்பாலிக்கும் பார்வை கடைக்கண் பார்வை. அதனால்தான் 'கல்யாணி', 'விசாலா' என்று பாடிக் கொண்டே வந்து விஜயா என்று சொல்ல வந்த இடத்தில் பஹு நகர விஸ்தார விஜயா என்று பாடினார். 'எல்லா நகரங்களுக்கும் பயணித்த உன்னுடைய விஜயா என்கிற பார்வை' என்பது இதன் பொருள். மற்ற பார்வைகள் அந்தந்தப் பெயருடைய நகரங்கள் மீது விழுகின்றன. கடைக்கண் பார்வை மட்டும் ('விஜயா' என்ற பெயருடைய பார்வை) எல்லா இடங்களுக்கும் போயிற்று.

**எந்த நாட்டில் தர்மம் ஜெயித்தாலும் அது அம்பாளுடைய கடைக்கண் பார்வையினால் கிடைக்கக்கூடிய வெற்றி**

ஆசார்யர் சொன்ன இந்த விஷயத்தைத் தான் பாரதியார் எடுத்து வந்து, ருஷ்ய நாட்டின் மீது பராசக்தியின் கடைக்கண் பார்வை படிந்ததாகப் பாடுகிறார். அங்கு தர்மம் ஜெயித்தது என்றார் பாரதி. ஏன் தெரியுமா? அங்கே மாகாளி பராசக்தி கடைக்கோடி பார்வையை வைத்தாள். எங்கு, எந்த நாட்டில் தர்மம் ஜெயித்தாலும் அது அம்பாளுடைய கடைக்கண் பார்வையினால் கிடைக்கக்கூடிய வெற்றி.

ஆகவே பாரதியாரின் கருத்துக்கு அடிப்படை தர ஆந்தோலித தீர்காக்ஷி என்ற திருநாமம்தான்! அம்பாள் அந்த இடத்தையே, திரிவேணி சங்கமத்தில் முக்கி எடுக்கிற மாதிரி புனிதமாக்குகிறாள், தனது பார்வையைச் செலுத்தி.

## முகப்பொலிவு

அம்பிகையின் முகம் பிரகாசமாக இருக்கிறது. அம்பாள் என்று சொன்னாலே பிரகாசம்தான். **தரஹாஸோ ஜ்வலோன்முகி.** இலேசான சிரிப்பு, மென்மையான புன்னகை - அம்பாளுடைய முகத்தில் பிரகாசமாக இருக்கக்கூடிய புன்னகை. ரொம்பச் சிரிப்பது என்பது வேறு. அதற்கு வேறு இடத்தைச் சொல்கிறார் ஆசார்யர். அம்பாள் எப்போது நிறைய சிரிக்கிறாள் என்றால், தனது தோழிப் பெண்கள் சூழ இருக்கிறபோது. சகிகளுடன் சேர்ந்து சிரிக்கிறாள். ஆனால், பக்தர்கள் போய் வழிபடுகிறபோது, அம்பாள் முகத்திலே ஒரு புன்னகை இருக்கிறதாம்! அவளிடம் போகக்கூடிய பக்தர்கள் எல்லோருமே உத்தமமானவர்கள் என்று சொல்ல முடியாது. ஆனால் அவள் எந்தக் குழந்தையைப் பார்த்தாலும் மென்னகையோடு அருளைத் தரக் கூடியவள் **தரஹாஸோ ஜ்வலோன்முகி.**

அதே அம்பிகைதான் **குருமூர்த்தி** - குருவாக, குரு மூர்த்தமாக - வடிவமாக இருப்பவள். **குணநிதி** - அப்படியே பொக்கிஷமாக அம்பாளிடத்தில் இருக்கக்கூடிய குணங்கள்! ஸர்வ குணங்களும் அவளிடம் நிறைந்திருக்கின்றன.

## அன்னையின் கருணை

**கோமாதா** - அம்பாள்தான் கோமாதாவாக இருக்கிறாள். இதற்கு இரண்டு விதமாக அர்த்தம் எடுத்துக் கொள்ளலாம். பசுவாக இருக்கக்கூடியவள் கோமாதா. சாத்விகமானது, மற்றவர்களுக்கு நன்மையைத் தரக்கூடியது பசு. அந்த மாதிரி அம்பாளும் நன்மையைத் தருகிறாள். இன்னொரு விதமாகவும் இதற்குப் பொருள் கொள்ளலாம் - பசுக்களாக இருக்கக்கூடிய ஜீவிதர்களுக்கு கோமாதாவாக இருக்கிறாள் என்று.

இந்த மாதாவிடம்தான் குகனாகிய சுப்ரமண்யர் உதித்தார் என்பதால் அடுத்து வரும் திருநாமம்



**குகஜன்ம பூ**[4]**:** ரொம்ப அழகான திருநாமம் இது. சுப்ரமண்ய சுவாமிக்கு குகன் என்று ஒரு திருநாமம். குகையில் இருக்கக்கூடியவர் குகன். இந்த இடத்தில் குகை என்பதற்கு என்ன அர்த்தம்? மனம் என்கிற குகைக்குள் இருப்பவர் என்று அர்த்தம். அதனால்தான் பாரதியார் பாடுகிறபோது, 'காட்டிலோர் பொந்திடை வைத்தேன்' என்று அக்னிக் குஞ்சைப் பற்றிச் சொல்கிறார். பொந்து என்பது குகை மாதிரி இருட்டானது.

குகை, குஹ்யம் என்ற வார்த்தை எப்படி வந்தது?

**(வளரும்)**

---

[4] வடமொழியில் நான்காவது பூ



• சுரேஷ்காணி



• கிட்டு

# காளையை அடக்கும் நெல்!

மடுமுழுங்கி!

''பெயரைச் சொன்னதும் 'யார், யாரைத் திட்டறாங்க?' எனக் கேட்காதீர்கள். இது ஒரு பழைமையான நெல் வகை. இன்றைய நகரத்துச் சிறுவர்களிடம் அரிசி எப்படி கிடைக்குதுன்னு கேட்டுப் பாருங்க. எத்தனை பேருக்குப் பதில் தெரியுமோ? வயல்ல விளையற நெல்லைப் பத்தியே தெரியாதவங்களுக்கு மடுமுழுங்கி பெயரே விசித்திரமாதான் இருக்கும். இது வரப்பு ஓரம், ஆறு மற்றும் குளக்கரை ஓரம் செய்துட்டு இருந்த ஒரு வகை விவசாயம். காணின்னு ஒரு இன மக்கள் பயன்படுத்தின நெல் வகை'' என்கிறார் குமரி மாவட்டத்தைச் சேர்ந்த கிட்டு.

நமது பழைமையான விவசாய முறைகளைப் பற்றி அறிந்துகொள்ளும் ஆர்வத்துடன் கிளம்பியபோது சிக்கிய பெயர்தான் இந்த மடுமுழுங்கி. ''உங்களுக்கு இது பத்தி விவரமா தெரியணும்னா சுரேஷ் காணியைப் போய்ப் பாருங்க. காணி இனத்தில் முதல் முறையா முனைவர் பட்டம் வாங்கினவர்'' என்ற கிட்டுவுக்கு நன்றி சொல்லிவிட்டுக் கிளம்பினோம்.

குமரி மாவட்டத்தில், காணி மக்கள் பெரும்பான்மையாக வாழும் கிரிப்பாறையில் சுரேஷ் காணியைச் சந்தித்தோம்.

''சம்பா பூ, வாரமுண்டா, காட்டுயானம், நௌரகருக்குறுவை, சீரகச்சம்பா, ஒற்றியடையான் போன்ற பல்வேறு வகை நெற்பயிர்கள் இருந்தன. அதோடு மடுமுழுங்கி நெல்லும் ஒண்ணு. மடுமுழுங்கி வயல்ல விளையற நெல் இல்ல. இது 100 ஆண்டு பழைமை வாய்ந்தது.

குழந்தைகளுக்கு இளம்பிள்ளைவாதம், சக்குவான் இருமல், கணை போன்ற நோய்களை நீக்கும் அருமருந்தாக எங்களுடைய முன்னோர்கள் மடுமுழுங்கியைப் பயன்

படுத்தினர். மடுமுழுங்கி நெல் குறைந்தது என்பது முதல் நூறு ஆண்டுகள் கடந்த மூங்கில்களில் பூக்கும் பூவில் இருந்து கிடைப்பது. இதனை மூன்று வகையாகப் பிரித்துள்ளனர். இளம்நெல், இடை நெல், மூப்புநெல். இளம்நெல் மூலிகைத் தன்மை கொண்டது. இடை நெல்லை சமைக்கப் பயன்படுத்தலாம் என்றாலும், இதனை மூன்று முறை வடிக்க வேண்டும். முதல் நீர் விஷத்தன்மை கொண்டது. இரண் டாம்நிலை வடிநீர் போதைத் தன்மை யோடு இருக்கும். இரண்டாம் நிலையில் சமைக்கப்பட்ட சோற்றைத்தான் ஆண்கள் திருமணம் பேசி முடிக்கப்பட்ட காலத்தில் உணவாகப் பயன்படுத்துவர். காரணம், இது காளையை அடக்குமளவு உடல் வலிவும் ஆண்மையும் அளிக்கும் நெல். கல்யாணப் பருவம் வந்துவிட்ட எங்கள் இளைஞர்கள் ஒருவரை ஒருவர் கேலி செய்ய 'என்னப்பா இஷ்டத்துக்கு இடை நெல் சாப்பிட்டியோ?' என்பர். இந்தச் சோற்றை 'தூண் அலைக்கி' என்னும் சொல் லால் அடையாளப்படுத்துவர். இடைநெல் சோற்றை பெண்களுக்கு உண்ணக் கொடுப் பதில்லை. மூப்புநெல் என்ற மூன்றாம் நெல்லை அனைவரும் உணவாக உட் கொள்ளுவர். இப்போது இந்த வகை நெல் கிடைப்பதில்லை. காரணம் இன்றைக்கு, பத்து ஆண்டுகள் கடந்த மூங்கிலைப் பார்ப் பதே பெரும் அரிதாகிவிட்டது. தேவை யற்றது என மரங்களை அழித்து, பணப்பயி ரென்று தேக்குகளைப் பயிரிட்டு காடுகளை யும் நமது ஆதி தாவரச் சொத்துக்களையும் அம்போன்னு பறிகொடுத்துட்டோம்.

இப்போதும் காட்டின் கடைநிலைப் பகுதிகளில் வயது முதிர்ந்த மூங்கில்கள் காணப்படுகின்றன. ஆனால், காட்டுக்குள் போய் நெல்லைச் சேகரிக்கும் மக்கள் யாரும் இப்போது இல்லை. அதற்கு வன அதிகாரிகள் விதிக்கும் கட்டுப்பாடுகளும், அடர்ந்த காடுகளில் நிறைந்து வாழும் வன விலங்குகளும்தான் காரணம். எங்களது நாடோடி வாழ்க்கையில் இத்தகைய அரிய நெல்லைப் பாதுகாக்கும் வசதியும் இல் லாது போனது. என்றாலும் எங்கள் முன் னோர்கள் உடல் திறனுக்கும் வீரத்துக்கும் சான்றாக இருந்த மடுமுழுங்கியை வரும் சந்ததிக்குக் காட்டும் ஆவணமாகவாவது பாதுகாக்க வேண்டும்'' என்கிறார் சுரேஷ். காளையை அடக்கி, இளவட்டப் பாறை யைத் தூக்கினால்தான் கல்யாணம்னு மாடர்ன் கேர்ள்ஸ் சொல்ல ஆரம்பித்தால் தான், மடுமுழுங்கிக்கு மறுவாழ்வு வருமோ என்னவோ?

– த.இ.தாகூர்

## தூறல் கவிதை!



என்னைத் தொலையாத துளிகளில்
எனக்கான கவிதைகளை
ஏந்தி வரும் மழை
நனைதலின் ஆனந்தத்தில்
நழுவவிட்ட அத்தனை துளிகளின் பின்
நகக்கண் ஓரம் நழுவி விடைபெறும்
ஒரு துளியைத் தக்க வைத்து
எழுதிடுவேன் ஒரு கவிதையேனும்
என்றாலும் இயலாது
என் மழை அனுபவம் இயம்ப
எத்தனை கவிதைகளாலும்

கார்த்திகா

# இருட்டை விலக்கிய கலை!





* நகலும்... அசலும்!

"எங்க அப்பா அம்மா படிக்காத வங்க. மகன் நல்லா படிச்சு நல்ல உத்தி யோகத்துக்குப் போகணும்னு ஆசைப்பட் டாங்க. நான் இந்தச் சிற்பப் படிப்பு படிக்கப் போறேன்னு சொன்னதும் அப்செட் ஆயிட்டாங்க. பையன் வாழ்க்கை இருட்டாயிடுமோ; யானை தன் தலையிலே தானே மண்ணை அள்ளிப் போட்டுக்கிற மாதிரி ஆயிடுமோன்னு ரொம்பக் கவலை. ஆனால் மண்ணுதான் எனக்கு மகிமையைத் தரப் போறது, கலைதான் என்னோட இருட்டை விலக்கப் போகுதுன்னு அவங் களுக்கு விளக்க முடியலை. பத்திரிகை யில், டீ.வி.யில என்னைப் பார்த்த பிறகு அப்பா அம்மாவுக்கு ரொம்பச் சந்தோஷம். வெறும் சோத்துக்கு உழைக்கிறவனில்ல. எம் மகன் பேரோடு வாழப் பிறந்தவன்னு சொல்லிக்கிறப்பதான் எனக்கு விருது வாங்கின மாதிரி கம்பீரமா இருந்தது.

சென்னை சங்கமத்துக்கு சென்னை முழுதும் சிலைகள் நிறுவும் வேலையில எங்க மாஸ்டர் சந்ரு தலைமையில் நான் செஞ்ச சிலைதான் ஒரு சிலம்பாட்டச் சிலை. அதுல எம் பேரு கூட பொறிச்சிருக்கு. ஸ்டெர்லிங் ரோட்டுல அது இருக்கு. இந்த வருஷத்தோடு என்னோட நாலு வருஷ சிற்பப் படிப்பு முடிஞ்சது. இந்த ஆண்டுக் கான சிறந்த மாணவன் என்ற விருதை லலித்





* உதயகுமார்

கலா அகாடமி எனக்குக் கொடுத்து கௌரவித்து இருக்காங்க.

முதல்ல ஒரு சிலையைச் செய்து முடிக்க ஒரு மாசமாகும். இப்ப அவ்வளவு நாள் தேவையில்லை. சித்திரமும் கைப்பழக்கம். முதல்ல கை, கால் தலைக்கு கம்பியை அமைச்சு பிறகு அது மேல கயிறு சுற்றுவேன். பிறகு களிமண்ணைப் பூசுவேன். பிறகு உருவத்தைக் கொண்டு வர்ற செதுக்கல் தொடரும். இந்த உருவத்தை பிளாஸ்டர் ஆஃப் பாரிஸில் வார்த்து டையாக மாற்றி, பின் நமக்குத் தேவையான உலோகத்துக்கு மாற்றலாம்.

படிக்க முடிச்சா சினிமா ஆர்ட் டைரக்ஷன், அலங்கார வடிவமைப்பாளர், அனிமேஷன், தனியார் சிற்பக் கூடம்னு நிறைய வேலை வாய்ப்பு உண்டு. பணம், பதவியை விட நான் கலைஞன், நானும் பிரம்மாதான் என்கிற பெருமையும் புகழும்தான் அர்த்தமுள்ள வாழ்க்கைன்னு எனக்குத் தோணுது'' - என்று பேச்சுப் பயணத்ினூடாக தனது வாழ்க்கை மற்றும் கலை பற்றிய பயணக் குறிப்புகளைச் செதுக்கிச் செல்கிறார் இருபத்திரண்டு வயதாகும் இளம் கலைஞன் உதயகுமார்.

செய்தி, சித்திரம் : **அமிர்தா**



* மேடை வடிவமைப்பு



* சிலம்பாட்டச் சிலை

''தை பொறந்தா நல்ல வழி பொறக்கும்னு சொல்லுவாங்க. அந்தத் தை மாசத்துல ஊரு சனங்க எல்லாரும் நரி மொகத்துல ஒருநாள் முழிச்சா, வருஷம் பூராவும் நல்லா இருக்கும்னு ஒரு நம்பிக்கை. எங்க பாட்டன்-தாத்தா காலத்துலேர்ந்து வங்கா நரி ஜல்லிக்கட்டு நடத்துறோம்'' என்கின்றனர் சேலம் மாவட்டம் வாழப்பாடி அருகேயுள்ள கொட்டவாடி, ரெங்கனூர் உள்ளிட்ட சில கிராமத்தினர்.

மேற்கண்ட கிராமங்களைச் சுற்றிலும் சிறிய மற்றும் பெரிய மலைக்குன்றுகள் அமைந்துள்ளன. அந்தக் குன்றுகளை 'கரடு' எனச் சொல்கின்றனர். அந்தக் கரட்டிலிருந்துதான் நரியைப் பிடித்து ஊருக்குள் கொண்டு வருகின்றனர்.





''நரிகள்ல நாலைஞ்சு வகை இருக்கு. எங்க பக்கம் வங்கா நரி. தை மாசம் மாட்டுப் பொங்கலுக்கு மறு தெனம் கரிநாளு. அன்னைக்கி விடியற்காலைல தாரை தப்பட்டையோட, நரி புடிக்கப் போறது பெரிய திருவிழா மாதிரி இருக்கும்! கரட்டு மேல ஏறி நாலைஞ்சு எடத்துல நரி வலையைக் கட்டி வைப்பாங்க. நரி உடனே வந்து மாட்டாது. கரட்டு மேல ஏறிப் போனதுல கொஞ்சம் பேரு அங்னயே தங்கிக்குவாங்க. எத்தினி நாள் ஆனாலும் அவுங்க நரியோடத்தான் கீழே எறங்கி வரணும். ஒரு கரட்டுல இல்லியா? வேற கரட்டுல மேல ஏறி வலை கட்டணும். தங்குறவங்களுக்கு அத்தினி நாளுக்கும் சோறு அங்னயே சமைச்சுக்கணும். அதெல்லாம் ஊர்ப் பொதுச் செலவு. இந்தத் தை மாசம் எங்களுக்கு நரி கிடைக்க, பதிமூணு நாள் ஆச்சு!'' எனச் சொல்கிறார் கொட்டவாடி கிராமத்தின் மணி.

''வங்கா நரி வலையில் மாட்டிய தகவல் ஊருக்குள் தெரிஞ்சதும், ஒவ்வொரு வூட்டு முன்னாடியும் வாசல் தெளிச்சு, பெருசா தெருவடைச்சு கோலம் போடுவாங்க. தேங்காய், பழம், சூடத்தோட வாசல்ல நிற்பாங்க.





• மணி



• பெருமாள்



# தடா இல்லாத ஜல்லிக்கட்டு!

ஊருக்குள்ளார இதுல மூணு வகையறா குடும்பங்களுக்கு பாத்யதை இருக்கு. அந்த வேலைய அந்தக் குடும்ப வகையறா ஆளுங்க தவிர வேற ஆள் போயி செஞ்சுட முடியாது. நரிய ஒரு கயிற்றுல கட்டி, அந்தக் கயிற்றை ஒரு குச்சியில கட்டி ரெண்டு பேரு தூக்கிட்டு வருவாங்க. அதும் மேல வெயில் படுமேன்னு, அந்த நரிக்கு ஒருத்தர் குடை விரிச்சுப் பிடிச்சிட்டு வருவாரு. ஒவ்வொரு வீட்டு சனங்களும் அது மொகத்துல முழிச்சுட்டு, அந்த நரிக்கு ஆரத்தி எடுப்பாங்க. பசங்க எல்லாம் முகத்துல கலர் பொடி பூசிப்பாங்க.

கடைசியா கோயிலைச் சுத்தி வர்றப்ப நரியை ஆட்டிக்கிட்டே வருவோம். அதுக்குனு நரியாட்டிப் பரம்பரை எங்களோடது. எல்லாம் முடிஞ்சதும் எந்தக் காட்டு மேல நரியைப் புடிச்சமோ, அங்கேயே விட்டுட்டு வந்திருவோம். ஏன்னா நரி ஊருக்குள்ள ராத்திரி இருக்கக் கூடாது. இதான் எங்க ஊரு வங்கா நரி ஜல்லிக்கட்டு!'' எனக் கூறுகிறார் நரியாட்டி குடும்பத்தில் ஒருவரான பெருமாள்.

எந்த நீதிமன்றமும் தடா போடாத வித்தியாசமான ஜல்லிக்கட்டு!

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

படங்கள் : ஆ.ப.செந்தில்குமார்

கிருஷ்ணன் இறந்து விட்டார்.

நம்பவே முடியவில்லை. வயது அறுபதைத் தாண்டி விட்டாலும், அவரைப் பார்த்தால் யாரும் ஐம்பதுக்கு மேல் மதிப்பிடவே மாட்டார்கள். அப்படி ஒரு மெல்லிய, முறுக்கான தேகம். புன்னகை மாறாத முகம். கிருஷ்ணன் - என் இரண்டாவது கணவர்.

பதினெட்டு வயது முடியும் முன்பே அமெரிக்காவில் அப்போதே போடு போடென்று போட்டுக் கொண்டிருந்த டாக்டர் ரமணனுக்கு என்னைத் திருமணம் செய்து கொடுத்து விட்டார்கள். இதில் என்னை ஒரு வார்த்தை யாரும் கேட்க வில்லை. கேட்டிருந்தாலும் எனக்கு

# புன்னகை

ஒன்றும் தெரியாத பருவம் அது.

அமிஞ்சிக்கரையிலிருந்து அமெரிக்கா போனதில், ஒரே நாளில் என் உலகம் தலை கீழாகப் போய் விட்டது. பல அவதாரங்கள் எடுப்பவன் ரமணன் என்பது பிலடெல்பியா போன பிறகுதானே தெரிய வந்தது? சினிமாவில் வருவது போல் சரியான பெண் பித்தன்.

இன்று அமெரிக்காவுக்கு வரும் பெண்களைப் போல நான் என்ன மைக்ரோ சாஃப்டில் வேலை செய்யும் சாஃப்ட்வேர் என்ஜினீயரா என்ன? வெறும் எஸ்.எஸ்.எல்.சி. முடித்த கையோடு என்னைத் தள்ளி விட்டு விட்டார்கள். அதனால், வேறு வழியில்லாமல், எல்லா அக்கிரமத்தையும் சகித்துக் கொண்டு ரமணனுடன் குப்பை கொட்டித் தீர்க்க வேண்டியிருந்தது. இதில் சடசடவென்று இரண்டே வருடங்களில் இரண்டு பெண் குழந்தைகள் வேறு.

இதையெல்லாம் ஐம்பது வருடங்களுக்குப் பிறகு சொல்லி என்ன பிரயோசனம்? சில சமயம் யோசித்துப் பார்க்கும் போது, வேறு யாரோ வாழ்ந்த வாழ்க்கையைப் போல இருக்கிறது.

எல்லா லீலைகளையும் செய்து முடித்து, குடியிலும் கூத்திலும் ஆடி ஓடிக் கொண்டிருந்த ரமணன், அல்பாயுசாக ஐம்பதிலேயே போய்ச் சேர்ந்து விட்டார்.

அதற்குப் பிறகு எவ்வளவோ போராட்டங்கள். அமெரிக்காவிலேயே செட்டில் ஆகி விட்ட ஓரிரு நண்பர்கள், உறவினர்கள் உதவியுடன் நர்ஸிங் கோர்ஸில் சேர்ந்து படித்தேன். ஒரு வழியாக தனியார் மருத்துவமனை ஒன்றில் வேலைக்குச் சேர்ந்து, ஷிப்ட் மாறி ஷிப்ட் உழைத்து, ஹெட் நர்ஸ் வரைக்கும் வந்துவிட்டேன்.

நாளாவட்டத்தில் என்னுடைய இரு பெண்களும் ஓரளவுக்குப் படித்து, வேலையில் சேர்ந்து, அமெரிக்க வழக்கப்படி, கூடப் பழகி காதலித்து திருமணம் செய்து கொண்டு, குழந்தைகளுடன் மகிழ்ச்சியாகவே இருக்கிறார்கள்.

இந்தக் கடமையெல்லாம் முடிந்த பிறகு, மீண்டும் என் வாழ்வில் பெரிய சூனியம் குடிகொண்டது. ஓடிக்கொண்டே இருந்தவரைக்கும் இந்த வயதிலும், கட்டிலைப் பகிர்ந்து கொள்வதைவிட, வீட்டுக்கு வந்தால் கூடமாடப் பேச, சமைத்ததைச் சேர்ந்து சாப்பிட, துணையோடு காலாற

நடக்க என்று தினசரி வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ள யாரும் இல்லையே என்ற ஆதங்கம் என்னைக் கவ்வியது.

ஒவ்வொரு நாளையும் தனியாகப் பிடித்துத் தள்ளுவது பிரம்மப் பிரயத்தனமானது எனக்கு. வீட்டுக்கு வந்தால் நின்றே கொல்லும் தனிமை.

அப்போதுதான் இன்டர்நெட் மூலம் கிருஷ்ணன் என்னைத் தொடர்பு கொண்டார். ரிட்டையர்ட் ஃபிஸிக்ஸ் புரொஃபஸர் அவர். யுனிவர்சிட்டியில் தன்னுடன் வேலை பார்த்த அமெரிக்கப் பெண்ணான சக லெக்சரரைத் திருமணம் செய்து, இரண்டு ஆண் குழந்தைகளை அழகாகப் பெற்று வளர்த்து, அவர்களுக்கும் திருமணம் செய்து கொடுத்து, எல்லாவற்றையும் முடித்து விட்டிருந்தார். ரிட்டையரானதும் ஓய்வுக் காலத்தை லிஸ்ஸியுடன் நன்றாக அனுபவிக்க, திட்டமிட்டிருந்தவருக்கு, அவளுக்கு வந்த த்ரோட் கேன்ஸர் இடியென இறங்கியது. சாதாரண இன்ஃபெக்ஷன் என்று நினைத்ததெல்லாம் பொய்த்து, ஒரு மே மாத விடிகாலையில் கிருஷ்ணனின் கனவுகளைக் கலைத்து விட்டுப் போய்

ஜி.பி.சதுர்புஜன்



## பெண்மொழி

"பேச்சலயும் சரி; செயல்லயும் சரி, பெண்களுக்கு சாமர்த்தியம் ஜாஸ்தி. மத்தியான நேரம் பசி வயித்தைக் கிள்ளுது. சாப்பிட வீட்டுக்குப் போறோம். சாப்பிட உட்கார்ந்தா இலையில் போட்ட சாதம் ரொம்ப குழைஞ்சு இருக்கு. 'எம்மா இப்படி இருக்கு'ன்னு கேட்டா, 'இது புது அரிசி. அதான் இப்படி ஆயிடுச்சு'ம்பாங்க.

இன்னொரு நாள் சாதம் ரொம்ப உதிரியா விரையா இருக்கும். 'என்னம்மா இப்படி இருக்கு'ன்னு கேட்டா, 'இது பழைய அரிசி. அதான் இப்படி ஆயிடுச்சு'ம்பாங்க. பெண்களோட கூர்மையான அறிவு அப்படி. எல்லா விஷயத்துக்கும் அவங்ககிட்ட ஒரு பதில் தயாரா இருக்கும்."

- ஒரு சொற்பொழிவில் வாரியார்



விட்டாள் லிஸ்ஸி.

இருவரும் சந்தித்து ஒருவர் கதையை மற்றவரிடம் பரிமாறிக் கொண்ட பிறகு, எங்கள் கண்கள் நேருக்கு நேர் களங்கமில்லாமல் சந்தித்துக் கொண்ட பிறகு, எங்களுடைய மறு திருமணத்துக்குத் தடையேதும் இருக்க வில்லை.

என்னுடன் ஒத்த வயதும் பருவமும் கொண்ட இந்தக் கிருஷ்ணனுடன் மீண்டும் ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொண்டு, ஒரு 'நார்மல் மேரீட் லைஃப்' என்றால் என்ன என்பதை அனுபவித்து விட்டுப் போய்விட வேண்டும் என்பதுதான்.

எனக்கு விதவிதமாக சமைக்கப் பிடிக்கும். கிருஷ்ணனுக்கு சுத்தமாக சமையலே தெரியாது. ஆனால், ரசித்து, ருசித்து, குறை சொல்லாமல் சீராட்டிப் பாராட்டி சாப்பிடத் தெரியும்.

எங்கள் இருவருக்குமே மிச்ச வாழ்க்கையைப் பார்த்துக் கொள்ளத் தேவையான பாங்க் பாலன்ஸ் இருந்தது.

பிடித்ததோ, பிடிக்கவில்லையோ, எங்கள் இருவருடைய குழந்தைகளும், இந்த பந்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய தாகிவிட்டது. நாளாவட்டத்தில், இதனால் யாருக்கும் எந்தப் பாதிப்பும் ஏற்பட வில்லை. அவரவர்கள் ஊரில், வேலையில், அவரவர்கள் பிஸி. எங்கள் வாழ்க்கையை நாங்கள்தானே பார்த்துக்கொள்ள வேண்டும்.

ஓடியே போய் விட்டன. கிருஷ்ணனுடன் கழித்த இந்தப் பத்து வருடங்கள் இனிமையாக இருந்தன என்றுதான் சொல்ல வேண்டும். நான் எதிர்பார்த்த அத்தனையும் அவரிடமிருந்து எனக்குக் கிடைத்தது. அவருக்கும் அப்படித்தான். பலமுறை அவரே என்னிடம் சொல்லிச் சந்தோஷப்பட்டிருக்கிறார்.

நான் வாயைத் திறந்தால் எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்து விடுவேன். அவர் பொறுமையாக எல்லாவற்றையும் கேட்டுக் கொள்வார். அவரும் நிறைய விடாமல் பேசுவாரே தவிர, எளிதில் என்னைப் போல் உணர்ச்சிவயப்பட மாட்டார்.

நான் தொடர்ந்து என்னுடைய மருத்துவமனை வேலையைப் பார்த்து வந்தேன். அவர் வீட்டிலேயே தோட்டமிட்டு, காய்கறிகள், பூச்செடிகள் என்று அருமையாக வளர்த்து ரம்யமான சூழ்நிலையை உருவாக்கி, பொழுதைக் கழித்து வந்தார். இடையிடையே அவருடைய பழைய நண்பர்களுடன் பல அழகிய பிரதேசங்களைக் காண உலக வரைபடத்துடன் சுற்றுலா கிளம்பி விடுவார். வாழ்க்கையை முழுவதுமாக ரசிக்கத் தெரிந்த மனிதர்.

எங்களிடையே பர்ஃபெக்ட் அண்டர்

ஸ்டாண்டிங் இருந்தது. இருவரும் ஒன்றும் மறைக்காமல் பல விஷயங்களைத் தொடர்ந்து பகிர்ந்துகொண்டோம்.

பணத்தைப் பற்றிப் பேசும்போது, தன்னிடம் சொத்து எதுவுமே இல்லை, மீதி நாட்களுக்கு வேண்டிய பணம் மட்டுமே இருக்கிறது என்று என்னிடம் பலமுறை சொல்லியிருக்கிறார். அவருடைய சொத்துக்கு ஆசைப்பட்டு நான் அவரைத் திருமணம் செய்யாததால், இதையெல்லாம் இந்தக் காதில் வாங்கி, அந்தக் காதில் விட்டுவிட்டேன்.

சற்றும் எதிர்பாராமல் வந்த கிருஷ்ணனின் சாவுச் செய்தி இடிமின்னலாக என்னுள்ளே இறங்கியது. ஜெர்மனியில், தம்பி வீட்டுக்குப் போன இடத்தில், சாதாரண நிமோனியாவில் ஆரம்பித்து மூன்றே நாட்களில் கிருஷ்ணனின் உயிர் பிரிந்து விட்டது. அவர் தானாகச் சென்று ஃபிரான்க்ஃபர்ட்டிலுள்ள ஒரு மருத்துவமனையில் அட்மிட் ஆகி, அங்கேயே அவர் உயிர் பிரிந்து விட்டிருக்கிறது.



**பிடித்ததோ, பிடிக்கவில்லையோ, எங்கள் இருவருடைய குழந்தைகளும், இந்த பந்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டியதாகிவிட்டது. நாளாவட்டத்தில் இதனால் யாருக்கும் எந்த பாதிப்பும் ஏற்படவில்லை.**

தகவல் வந்ததும், உடனே ஃப்ளைட் பிடித்துப் போய்ச் சேர்ந்தேன்.

அவருடைய இரு மகன்களும் வேறு வேறு ஊரிலிருந்து வந்திருந்தனர். வசதியாக இருந்தார்கள். ஆனால், ஆஸ்பத்திரிக்கு பில் கட்ட வேண்டும் என்றதும், இருவரும் என்னைக் கைகாட்டி விட்டு ஒதுங்கி விட்டனர். இவ்வளவு நாட்கள் கூட இருந்து அன்பு பாராட்டியதற்கு இது கூடவா நான் செய்யமாட்டேன்? என்னுடைய சொற்ப சேமிப்பிலிருந்து முழுத் தொகையையும் கட்டினேன். அந்த ஊரிலேயே அவருடைய இறுதிச் சடங்குகளைச் செய்ய வேண்டியதிருந்தது. அதற்கும் என் பர்ஸ்தான் திறந்தது.

இறந்தபோது கிருஷ்ணனின் முகத்தில் ஒரு விநோதமான புன்னகை தவழ்ந்து, அப்படியே உறைந்திருந்தது. இதை எல்லோரும் மூக்கில் விரலை வைத்துக் கவனித்தோம்.

'என்ன ஒரு தெய்விகமான, அமைதியான புன்னகை' என்று, வந்து பார்த்த பலரும் ஆச்சரியப்பட்டார்கள்.

'உண்மையை ஒளிவு மறைவு இல்லாமல் பேசி வாழ்ந்த மனிதரால்தான் இப்படிப்பட்ட புன்னகையுடன் இறக்க முடியும்'. இப்படியும் வந்திருந்த பலரும் சொல்வது காதில் விழுந்தது.

தம் பிள்ளைகள் பேரில், அவருடைய உயிலை எழுதி விட்டுப் போயிருந்தார். அந்த உயிலைக் கொண்டு வந்து காண்பித்தார்கள். என்னால் நம்பவே முடியவில்லை.

எத்தனை சொத்துக்கள் அவர் பேரிலே? இரண்டு பெரிய பங்களாக்கள், மற்றும் பல இடங்களில் எப்போதோ வாங்கிப் போட்ட மனைகள். மொத்த மதிப்பு பலப்பல லட்சம் டாலர்கள்...!

நான் கேட்காமல் இருக்கும்போதே, சொத்தே தனக்கு இல்லை என்று இந்தப் பத்து வருடங்களில் எத்தனை முறை சொல்லிக்கொண்டே இருந்திருக்கிறார்...?

இவ்வளவு அந்நியோன்னியமாக இருந்துகொண்டே எதற்காக அவருடைய

இத்தனை சொத்துக்களையும் அவர் மறைக்க வேண்டும்?

ஏன் கிருஷ்ணன்? ஏன்?

மெதுவாக மிதந்து மேலேறி வந்த அந்தக் கசப்பான உண்மை, எனக்கு வலியைத் தந்தது.

மீண்டும் நான் ஏமாற்றப்பட்டிருக்கிறேன்.

முன்பு ஒரு ரமணன். இன்று ஒரு கிருஷ்ணன். இதில், கிருஷ்ணனே பெரிய திருடனாக என் கண் முன்னே விஸ்வரூபம் எடுக்கிறார். என் அன்பைப் பயன்படுத்தி, முழுமையாக என்னை முட்டாளாக்கிச் சென்றிருக்கிறார்.



**இறந்தபோது கிருஷ்ணனின் முகத்தில் ஒரு விநோதமான புன்னகை தவழ்ந்து, அப்படியே உறைந்திருந்தது.**

மீண்டும் கிருஷ்ணனுடைய இறுதிப் புன்னகையை நன்றாக நினைவில் நிறுத்திப் பார்க்கிறேன்.

திடீரென சம்மட்டியால் அடித்தது போல் என் மண்டையில் உறைத்தது.

அந்த மர்மப் புன்னகையின் அர்த்தம்...?

'நல்லவன் போல் நன்றாக நடித்து, உன்னை எப்படி ஏமாற்றிவிட்டேன் பார், நளினி!'

எனக்கு மட்டும்தான் கிருஷ்ணனின் மர்மப் புன்னகையின் முழு அர்த்தம் புரிந்தது. ●



## வாழ்வுக்குப் பிறகும்...

1980களில் பெண் கவி உலகம் இன்று போல் இருக்கவில்லை. விக்கிரமாதித்தியன் ஒரு முறை, ஔவையாருக்குப் பிறகு தமிழில் பெண் கவிஞர்களே இல்லை என்று பேசினார். ஆனால், சமீபத்தில் திருப்பூர் புத்தகக் கண்காட்சியில் பேசிய தேவேந்திர பூபதி, பெண்கவிச் சூறாவளிகளால் ஆண்கவி மலைகளே காணாமற்போகின்றன என்றிருக்கிறார்.

நடுவில் நிகழ்ந்த காலமாற்றம் ஏற்படுத்திய சாதனைதான் இன்றைய பெண் கவிஞர்களின் ராஜபாட்டை. தமிழின் முதல் நவீனப் பெண்ணிலக்கியம் என்று பாராட்டப் பட்ட கவிதைகள் சுகந்தி சுப்ரமணியத்துடையவை. கற்பனைப் புனைவுகளைத் தவிர்த்து, பெண்களின் யதார்த்த வாழ்க்கையின் நிகழ்வுகளைப் பதிவு செய்தன இவரது எழுத்துக்கள்.

**'ரோஜாக்களைப் பற்றி**
**பேசியும் புகழ்ந்தும்**
**அலுத்துவிட்டது**
**தினப்படி வாழ்க்கையில்**
**முட்களுடனே பரிச்சயம்**
**அதிகம் என்பதால்'**

போன்ற சுகந்தியின் வரிகள் பெரிதும் சிலாகிக்கப்பட்டன. சென்ற மாதம் காலமான கோவையைச் சேர்ந்த சுகந்தி சுப்ரமணியன் 'புதையுண்ட வாழ்க்கை', 'மீண்டெழுதலின் ரகசியம்' போன்ற தொகுப்புகளையும் இன்னும் அச்சில் ஏறாத 300 கவிதைகளையும் விட்டுச் சென்றிருக்கிறார் பெண்ணுலக மீட்சிக்கு, தன் வாழ்வுக்குப் பிறகான களத்துக்காக.

**- தாண்டவக்கோன்**

'மகளுக்கு நல்லபடியாக திருமணம் கைகூட வேண்டும்', 'மகனுக்கு நல்ல வேலை அமைய வேண்டும்'... இப்படி ஏதோ ஒரு வேண்டுதலோடுதான் எல்லோருமே கோயில்களுக்குள் நுழைகிறார்கள்.

ஆனால், 'ஆருயிர்கட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்' என்று ஆண்டவனிடம் வேண்டியவர் அருட்பிரகாச வள்ளலார்.

கந்தக்கோட்டத்தில் உள்ள முருகன், திருவொற்றியூரில் உள்ள வடிவுடையம்மன்... என்று பல மூர்த்திகளை வழிபட்டுப் பாடிய வள்ளல் பெருமான் அத்வைத அனுபவம் பெற்றார்.

சாதி, இனம் என்று சொல்லி தாழ்வு பாராட்டுவதும், கடவுள் என்கிற தத்துவம் புரியாமல் செய்யும் மூடத்தனமான சடங்குகளும், புலால் உண்ணுதலுமான பல்வேறு பழக்கங்கள் அவரை மிகவும் பாதித்தன.

அவை அனைத்தையும் அடியோடு விலக்குவதை வற்புறுத்தியது வள்ளலாரின் பேருள்ளம்!

'பயிரின் வாட்டத்தையே தாங்க முடியாத அவர் பரிவு, பிற உயிர்கள் உணவுக்காக வதைக்கப்படுவதைக் கண்டு துடித்துப் போனது. மக்களின் வறுமையையும், அறியாமையையும் கண்டு நைந்தது.

அதன் விளைவாக 'சுத்த சன்மார்க்கம்' என்கிற தத்துவத்தை முன்னிறுத்தினார் வள்ளலார். அதைத் தொடர்ந்து சத்திய ஞானசபையும், பின்பு ஜோதி தரிசனமும் அவரால் உணர்த்தப்பட்டன.

'கருணை' என்கிற ஒற்றைச் சொல்லையே உயிர்ப்பின் பொருளாகச் சொன்னவர் வள்ளல் பெருமான். வடலூரின் சத்திய ஞானசபை, அதைத்தான் இன்றும் நினைவூட்டிக் கொண்டிருக்கிறது.

'**ப**சித்திரு; **த**னித்திரு; **வி**ழித்திரு' வள்ளல் பெருமானை தனித்துக் காட்டும் சொற்கள் இவை. இதுமட்டுமல்ல...

★ பிறரைப் பழித்துப் பேசும் சொற்களைக் கேட்கக் கூடாது. மனத்தை அந்தப் போக்கில் செலுத்தவும் கூடாது.

★ கொடுமையான நோன்பு இருப்பதைவிட, கொல்லாமை சிறந்தது.

★ எல்லோரையும் முகமலர்ச்சியுடன் பாருங்கள்; இனிமையாகப் பேசுங்கள்.

★ நல்ல எண்ணத்தோடு இரு; அது உன் நடத்தையைப் பாதுகாக்கும்.

★ நெல் விதைத்தல் என்றால், உழுவது முதல் அறுவடையின் பலனை அனுபவிப்பது வரை அதில் அடங்கும். சன்மார்க்கம் என்பது சாதாரண ஒழுக்கம் முதல் அசாதாரண ஒழுக்கம் வரை அடங்கியது.

நடைமுறை வாழ்வில் கடைப்பிடிக்கக் கூடிய எளிய விஷயங்கள்தான். கடைப்பிடித்தால் பெரும் பயனை அளிக்கவல்ல மந்திரமும் இதுதான்!

**– ராகவன்**

# பதவி பெற...



# பெண் மயிலுக்கும் தோகை உண்டு!

● **அருந்ததி, ஆம்பூர்**

**ஆஸ்கார் விருதிலும் பொலிக் உண்டு என்கிறார்களே. மெய்யாலுமா கிரேசி?**

ஏ.ஆர்.ரஹ்மானுக்கு ஆஸ்கார் கிடைத்ததே பொலிசால்தான். கடவுளின் பொலிக. ஏ.ஆர்.ரஹ்மான் செய்யும் தொழிலாம் தெய்வத்தின் பொலிக, அல்லா முதற் கொண்டு 'எல்லா இறைவனும் ஏ.ஆர்.ரஹ்மான் புகழுக்கே'. இசை பட வாழும் இறைவன்.

● **ரா.பிரசன்னா, மதுரை**

**சமையல் கலை ஆய கலைகள் அறுபத்து நான்கில் ஒன்றா சார்?**

தாயினும் சாலப் பரிந்தூட்டும் அன்ன பூரணி 'ஆயா - கலை', பசி வந்திட மற்ற அறுபத்து நாலும் பறந்து போகும்.

● **ராஜி குமார், சென்னை**

**'கல்லானாலும் கணவன்' சரி... அப்ப மனைவி?**

தட்டிக் கேட்டு குடைந்து எடுத்து செதுக்கி அந்தக் கல்லைச் சிலையாக்கும் மனைவி 'உளியானாலும் உத்தமி'.

● **வி. ஆனந்தகிருஷ்ணன், அண்ணாநகர்**

**பெண் மயிலாள் தோகை விரித்தாள் என்கிறோமே எப்படி? ஆண் மயிலுக்குத் தானே தோகை உண்டு?**

நாம் தூங்க நமக்காக நமது பாயை நம் மனைவி விரிப்பதில்லையா! அது போலத் தான் தனியாகச் சுருண்டு கிடக்கும்போது ஆண் மயிலுக்கு சோகை; பெண் மயிலைக் கண்ட சந்தோஷத்தில் விரிவது அதன் தோகை. மயிலை விடுங்கள், நம்மை ஆதரவாக அணைக்க தனது 'தோ (இந்தியில் இரண்டு) கையை விரிப்பவளின் பெண் மையில்' நாம் அடைக்கலம் புகுகிறோம்.

> **தோ(இந்தியில் இரண்டு) கையை விரிப்பவளின் பெண்மையில் நாம் அடைக்கலம் புகுகிறோம்.**

● **கலிவரதன், விழுப்புரம்**

**கண்ணன் 'மாதங்களில் மார்கழியாக' இருக்கிறான். அப்ப முக்கண்ணன்?**

வாரங்களில் தே'வாரமாக' இருக்கிறான்.

● **என்.பாலகிருஷ்ணன், மதுரை**

**தம்பி உடையான் படைக்கு அஞ்சான்; அண்ணன் உடையான்?**

'நடைக்கு அஞ்சான்'. அண்ணன் ராமனின் வழியில் பின்தொடர்ந்து நடந்த தம்பி லக்ஷ்மணன்.

● **அமிர்தா, வடசென்னை**

**உங்களின் தீவிர ரசிகர் யார்?**

டெல்லி கர்னாடகா வங்கியில் பணி புரியும் ரமேஷ், எனது நாடகங்களை என்னைவிட அதிகமாகப் பார்த்திருக்கிறார். ரமேஷ் என்ற இந்த விசிறியிலிருந்து வருவது வெறும் காற்றல்ல. நான் சுவாசிக்கும் ஆக்ஸிஜன்.

● **வாசுதேவன், அயிரோலி**

**யோசனைக்கும், சிந்தனைக்கும் என்ன பெரிய வித்தியாசம்?**



யோசனை கடமை... சிந்தனை பலன். யோசிக்காமல் கடமையைச் செய்... பலனைப் பற்றிச் சிந்திக்காதே.

- **மு. மதிவாணன், அரூர்**

**பூரண சுதந்திரம் அடைய வழி?**

பூரணக் கட்டுப்பாடு

- **ம. ஞானபிரானி, சென்னை**

**தர்மம் தலை காக்கும். அதர்மம்?**

தலை தாக்கும்... தலைக்கு வந்ததை தலைப்பாகையோடு போக வைக்கும் தர்மம். தலைப்பாகைக்காக தலையையே வெட்டிச் சாய்க்கும் அதர்மம்.

- **பி. ஸ்ரீனிவாசன், வடபழனி**

**Sister-concern என்கிறோம். இதிலும் பெண்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறோம். ஏன்?**

சுபாவமாக பெண்களுக்குத்தான் Concern அதிகம் பிரதர்!

- **ரஞ்சனி, மதுராந்தகம்**

**கற்ற கையளவை உலகளவாக்க முடியுமா?**

மாடு மேய்த்த கண்ணன் கற்றது கை-மண்ணளவு. ஆனால் வாய் திறந்து அவன் பெற்றவளுக்குக் காட்டியதோ உலகளவு.

''சென்ற வருடத்தில் ஒருநாள் திடீரென ஜுரம். மருத்துவரிடம் சென்றேன். அவர் ஏகப்பட்ட பரிசோதனைகளைச் செய்து மருந்து மாத்திரைகளை எழுதிக் கொடுத்தார். எல்லாம் சாப்பிட்டும் ஜுரம் கட்டுக்குள் வரவில்லை. ஜீரோதெரபி பற்றிக் கேள்விப்பட்டுச் சென்றேன். என்னைப் பார்த்தவுடனேயே விபின் சந்த்ஜி, 'நீ உட்கொள்ளும் மருந்து மாத்திரைகளை உடனே நிறுத்து' என்றார்.

அதற்குள் நான் மேற்கொண்ட பரிசோதனைகளால் எனக்கு 'எலி ஜுரம்' வந்திருக்கிறது என்பதைக் கண்டுகொண்டேன். மருத்துவர்கள் என்னை மருத்துவமனையில் சேர்ந்து விடுமாறு கேட்டுக்கொண்ட போதும், ஜீரோதெரபியைப் பின்பற்றி கடுமையான ஜுரத்திலிருந்து விடுபட்டேன். அப்போது முதல் நானும் என் குடும்பத்தாரும் ஜீரோதெரபி சிகிச்சையையே மேற்கொள்கிறோம்'' என்கிறார் மதுஸ்ரீ.



* விபின் சந்த்

''ஒருமுறை விபத்து காரணமாக எனது வலது தோள்பட்டையில் எலும்பு முறிவு ஏற்பட்டது. எக்ஸ்ரே எடுத்து அதை ஊர்ஜிதம் செய்துகொண்ட பின் ஒரு பிரபலமான மருத்துவமனையில் அதற்கு நீண்ட சிகிச்சை எடுத்துக்கொள்ள வேண்டும் எனப் பரிந்துரைத்தனர். ஆனால் ஜீரோதெரபியில் சொல்லிக் கொடுத்த சில எளிய வழிமுறைகளைப் பின்பற்றி என் தோள் பட்டையைக் குணமடையச் செய்துகொண்டேன்'' என்கிறார் நவீன்.

''மருந்தே இல்லாத மருத்துவம் என்பதுதான் ஜீரோதெரபி'' என்றார் விபின் சந்த். அப்படி என்னதான் இருக்கிறது ஜீரோதெரபியில் என்று கண்டறிவதற்காக அவரை நாம் சந்தித்தபோது, ''எத்தகைய உடல்நலக் குறைபாடுகள் இருந்தாலும் அது எவ்வளவு கடுமையானதாக இருந்தாலும் மருந்தோ, மாத்திரையோ இல்லாமல் நூறு சதவிகிதம் சரிசெய்துவிட முடியும் என்பதைத்தான் ஜீரோதெரபி மூலம் செய்து காட்டி நிரூபித்துள்ளேன்'' என்கிறார் சர்வநிச்சயமாக!

# சிகிச்சை முறைகளுள்



''நம் உடம்புக்குள் என்ன செல்கிறதோ, அதைப் பொறுத்துதான் நம் ஆரோக்கியம் அமையும். நம் உடம்புக்கு ஒரு உடல்நலக் குறைவு ஏற்பட்டால் அதை எப்படிச் சரிசெய்துகொள்ள வேண்டும் என்பதும் நம் உடலுக்கே தெரியும்! சிகிச்சை என்ற பெயரில் நாம் உடலை அலைக்கழிக்கக்கூடாது. பஞ்சபூதங்களால் ஆக்கப்பட்டது நம் உடல் என்ற கூற்றே தவறானது. நிலம், நீர், நெருப்பு, காற்று என்ற இந்த நான்

# இது ஹீரோ!

கினாலும் செய்யப்பட்டதுதான் நம் உடல். இவை அனைத்துமே ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் ஒரு சரியான விகிதாசாரத்தில் கலந்திருக்கும். அது அவ்வப்பொழுது மாறுபடும்போதுதான் உடலுக்குள் பல்வேறு கோளாறுகள் ஏற்படுகின்றன. என்ன கோளாறு என்பதைக் கண்டறிந்து விட்டாலே போதும், சரிசெய்து விடலாம். ஒருவரது நாக்கைப் பார்த்தே அவருக்கு என்ன குறைபாடு உள்ளது என்பதை ஜீரோ தெரபியில் சொல்லி விடுவோம். இதுவரை ஜீரோதெரபி மேற்கொள்ள வந்த ஆறாயிரம் நபர்களில் ஒருவரது கையைக் கூட தொட்டுப் பார்க்காமலேயே சிகிச்சை அளித்துள்ளோம்.

* மதுஸ்ரீ



* நவீன்



**சா**தாரணமாக, ஏதோ தலைவலி என்றோ வாந்தி என்றோ மருத்துவரிடம் செல்கிறோம். உடனே அவர் மருந்துகளை எழுதிக் கொடுக்கிறார். நாமும் அதை இரண்டு மூன்று நாட்களுக்குச் சாப்பிட்டு விட்டு விட்டு விடுகிறோம். சில உடல்நலக் குறைபாடுகள் எவ்வளவு மாத்திரை மருந்துகள் உட்கொண்டாலும் சரியாக்கப்படாமலேயே போவதும் உண்டு. நோய் ஏன் ஏற்பட்டது என்ற மூலகாரணத்தைக் கண்டறியாமல் அந்தக் குறைபாட்டுக்கு மட்டும் சிகிச்சை அளிப்பதால்தான் இப்படி நிகழ்கிறது.

**உ**ணவே மருந்து. ஆம்... நாம் உட்கொள்ளும் நல்ல சாத்வீக உணவு வகைகளிலிருந்து நமது தேகத்துக்கு தேவையான எனர்ஜியை சுரப்பிகள் எடுத்து மறைத்து வைத்துக் கொள்ளும். நமக்கு ஏதாவது கோளாறு ஏற்படும்பொழுது அந்தச் சுரப்பிகளிலிருந்து தானாகவே எனர்ஜி தோன்றி கோளாறுகளைச் சரிசெய்துவிடும். ஆனால் நாம் என்ன செய்கிறோம்? வேண்டாத உணவுமுறைகளை மேற்கொள்கிறோம். ஏகப்பட்ட கெமிக்கல்களைச் சாப்பிடுகிறோம் (டேப்லட்டுக்களும் கெமிக்கல்களே!) அதனால் அந்தச் சுரப்பிகள் சரிவர



வேலை செய்ய இயலாமல் போய்விடுகின்றன.

மொத்தத்தில் சைவச் சாப்பாட்டைச் சாப்பிட்டு, இயற்கையான உணவு முறைகளைக் கடைப்பிடித்து, மருந்து மாத்திரை உட்கொள்வதை நிறுத்தினாலே போதும் எல்லோரும் ஹீரோதான்'' என்கிறார், அனைத்து நோய்களையும் ஜீரோதெரபியை ஜீரோ பீஸ் வாங்கிக் குணப்படுத்தும் விபின் சந்த். இதில் மேலும் பல புதிய ஆராய்ச்சிகளை மேற்கொள்ளப் போவதால் சிகிச்சை அளிப்பதைத் தற்காலிகமாக நிறுத்தியுள்ளார்.

**- நளினி சம்பத்குமார்**

# காதல் வளர்த்தேன்!

**சை**க்காலஜி கிளாஸ். ராகவன் ஸார் கையிலிருந்த நோட்ஸை மேஜை மீது அலட்சியமாக வைத்துவிட்டு, "ஃப்ரண்ட்ஸ். இன்னிக்கு நாம பார்க்கப் போறது எக்ஸாமினேஷன் பாய்ண்ட் ஆஃப் வ்யூல ரொம்ப முக்கியமானது. ஸோ கவனமா க்ளாஸைக் கவனியுங்க. கவுஜ பண்றவனுங்க இப்பவே வெளிநடப்பு செய்யலாம். ஆனா இந்தப் பாடத்தை இருபது தடவை எழுதிட்டு வந்து நாளைக்கு என்கிட்ட காட்டணும். எது பெட்டர்னு நீங்களே முடிவு செஞ்சுக்கங்க" என்றார்.

ராகவன் ஸார் சில சமயம் நல்ல ஜாலி மூடில் இருப்பார். சில சமயம் கடி மற்றும் கண்டிப்பு மூடில் இருப்பார். அவர் எப்போது எந்த மூடில் இருக்கிறார் என்பதைப் பகுத்தறிவதற்குள், மாணவச் செல்வங்கள் நாங்கள் நொந்து நூடுல்ஸ் ஆகி வேகாத பணியாரம் போல ஆகிவிடுவோம். பின்னே பசங்க யூஸ் பண்ற கவுஜ கிவுஜ வார்த்தையெல்லாம் எப்படியோ கத்துக்கிட்டு வந்துட்டு, எங்களுக்கே கடச்சுட பொங்கல் வச்சுத் தர்றாரேன்னு கடுப்பா இருக்குது. அவர் முகம் இன்னிக்கு சரியில்லை. ஏடாகூடமா மாட்டிக்கிட்டா பிரின்ஸி வரைக்கும் போய் விஷயத்தைப் பெரிசாக்கிடும் டோனி (நாங்கள் அவருக்கு வச்ச நிக் நேம் டோனி. அடிக்கடி டோனை மாத்திக் கொண்டிருப்பதால்). வழக்கம் போல க்ளாஸைக் கவனிக்கிற மாதிரி நடிக்க முடிவு செஞ்சு, ஆளாளுக்கு படுசீரியஸாக முகத்தை வைத்துக் கொண்டோம்.

திருப்தியான முகபாவத்துடன் அவர் கச்சேரியை ஆரம்பித்த அதே சமயம், 'தோழியா என் காதலியா யாரடி என் கண்ணே' என்று யாருடைய மொபைலோ உச்சஸ்தாயியில் அலறியது. நல்லவேளை ஆண்கள் பகுதியிலிருந்து இல்லை, பெண்கள் சைடிலிருந்துதான் இந்த மொபைல் சப்தம். ஆனால், அவர் எந்த தேவதைக்கும் மயங்காத ருஷ்யசிங்கர் ஆயிற்றே. கோபத்துடன் விழிகளை உயர்த்தி, "யாரது, நா அங்க வரட்டா. மேடமே இங்க வர்றீங்களா?" என்று உறுமினார். இன்று க்ளாஸ் களை கட்டி விட்டது என்று நாங்கள் (நாங்கள் என்பவர்கள் கடைசி பெஞ்ச் கடலைகளான ராகுல் ஆகிய நான், ரம் என்ற ரமேஷ், அன்வர், சம்மி என்கிற சண்முகம் ஆகிய நால்வர் படை. எப்போதாவது மூடு வந்தால் படிப்போம்) எண்ணிக் கொண்டோம்.

மித்ரா பயந்தவாறே அவர் அருகில் சென்றாள். "காலேஜுக்குள்ள செல்போன் உபயோகிக்கக் கூடாதுன்னு உனக்குத் தெரியாதா, எங்க அது, கொண்டு வா" என்றார் குரலை உயர்த்தியபடி.

அவள் ஜீன்ஸ் பாக்கெட்டிலிருந்து அதை மெதுவாக எடுத்து அவரிடம் நீட்டினாள்.

"என்கிட்ட எதுக்கும்மா கொடுக்கறே.


கேம்பஸ் கதை
பசங்க யூஸ் பண்ற
கவுஜ கிவுஜ
வார்த்தையெல்லாம்
எப்படியோ கத்துக்கிட்டு
வந்துட்டு, எங்களுக்கே
சுடச்சுட பொங்கல்
வச்சுத் தர்றாரேன்னு
கடுப்பா இருக்குது.
உமாஷக்தி

அந்த காலை நீ எடுக்கறதுக்குள்ள கட் ஆயிடுச்சு இல்லை. இப்ப நீ அந்த நம்பருக்குக் கூப்பிடற. கமான்'' என்றார்.

அவன் எச்சிலை விழுங்கியபடி, ''சார் சார் மறந்து போய்க் கொண்டு வந்துட்டேன் சார், சைலண்ட் மோட்லதான் இருந்தது. யாரோ மாத்தி வைச்சுட்டாங்க'' என்றான்.

''கால் பண்றியா, இல்லை பிரின்ஸிபாலை மீட் பண்றியா?'' என்று அவர் பதிலளிக்க, அவன் அந்த நம்பரைப் போட்டான்.

வாயில் டைனோசர் நுழைந்தால்கூட



தெரியாத அளவில் இக்காட்சியை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சஞ்சயின் செல்போன், 'பச்சை நிறமே பச்சை நிறமே. இச்சை மூட்டும் பச்சை நிறமே. புல்லின் சிரிப்பும் பச்சை நிறமே எனக்கு சம்மதம் தருமே' என்று வகுப்பே அதிரும்படியாக ஃபுல் சவுண்டில் ஒலித்தது.

அவன் அலறிவிட்டான். ''நான் போன் செய்யவேயில்லை சார். நம்புங்க, என் பேக்லேர்ந்து யாரோ எடுத்து அவளுக்கு டயல் பண்ணியிருக்காங்க'' என்று அவன் கெஞ்சியும் அவர் கேட்கவில்லை. அவனை வகுப்பை விட்டுத் துரத்திவிட்டு, அவன் செல்போனைப் பிடுங்கி வைத்துக் கொண்டார்.

மித்ரா பொறுமியபடி தன் இடத்துக்குப் போய் உட்கார்ந்தாள். சஞ்சயின் போனில் திருவிளையாடல் செய்த நான் எனக்குள் சிரித்துக் கொண்டேன். 'வேணும்டி உனக்கு, நேத்து நான் பீர் அடிச்சதை எங்கப்பாகிட்ட போட்டுக் கொடுத்தே இல்ல, உனக்கு இதெல்லாம் பத்தாது' என்று மனத்துக்குள் கறுவிக் கொண்டேன். மித்ரா நான் வசிக்கும் ஃப்ளாட்டில் ஏ ப்ளாக்கில் இருந்தாள். என்னிடம் அதிகம் பேச மாட்டாள். ஆனால் அப்பாவிடம், அப்படி ஒரு ஈஷல். வழிசல், நாற்பது வயது ஆண்கள் மேல் இந்த ஓரசுப் பெண்களுக்கு அப்படி ஒரு மரியாதை கலந்த அன்பு. அப்பாவிடம் பேசித் தொலைக்கட்டும் நமக்கென்ன என்று நினைத்தால், அவ்வப்போது காலேஜ் அப்டேட்ஸ் என்னைப் பற்றிய செய்திகளை அவர் காதில் ஒலிபரப்பிக் கொண்டிருந்திருக்கிறாள் என்று சமீபத்தில்தான் தெரிந்து கொண்டேன். அவளுக்கும் இந்த விளங்காத பயல்

''உங்க டைவர்ஸ்'க்கு என்ன காரணம்னு கேட்டதுக்கு உங்க கணவர், நீங்க அவரை மதிக்கிறதே இல்லைன்னு சொல்றாரே...?''

''சுத்த பொய். அவன்தான் என்னை மதிக்கிறதில்லை...!''

**– சீர்காழி வி. ரேவதி**

சஞ்சய்க்கும் ஒரு க்ரஷ் இருந்ததை அறிந்து, அருமையான ஒரு சந்தர்ப்பத்தில் இவனைப் பழிவாங்கியாச்சு என்று கறுவி முடிப்பதற்குள் பெல் அடித்தது.

சீக்கிரம் இந்த செல்போன் மேட்டருக்கு ஆப்பு வைக்கறேன் என மனத்துள் கறுவியபடி ராகவன் சார் போய்விட்டார்.

''வாடா போய் ஒரு டீ அடிச்சுட்டு வரலாம்'' என்று கூப்பிட்ட நண்பர்களுடன் போகாமல், மித்ராவின் கடுப்பேறிப் போன முகத்தை இன்னும் கொஞ்ச நேரம் பார்க்கலாம் என்று நினைத்து அங்கேயே இருந்து

விட்டேன். அவளும் தோழிகளுடன் போகாமல் தன் பெஞ்சிலேயே ஏதோ தீவிர சிந்தனையில் உட்கார்ந்திருந்தாள்.

எங்களைத் தவிர வகுப்பில் யாரும் இல்லை. நான் மித்ராவிடம், ''காலேஜ் லைஃப்ல இதெல்லாம் சகஜம், டோன்ட் ஃபீல். பீ கூல்'' என்று ரொம்ப நல்லவன் போல அட்வைஸ் செய்தேன்.

அவள் என்னைத் தீர்க்கமாகப் பார்த்தபடி, ''ஏன் ராகுல் அப்படி செஞ்சே?'' என்றாள்.

நான் திடுக்கிட்டு, ''எ... என்ன செஞ்சேன்?'' என்று தடுமாறினேன். ''நான் பார்த்தேன் ராகுல். நீ சஞ்சு பேக்லேர்ந்து போனை எடுத்ததை, ஆனால் என்னை நீ கூப்பிடுவேன்னு நான் எதிர்பார்க்கலை. நான் இன்னிக்குன்னு பார்த்து சைலன்ட் மோடுல வைக்காம போயிட்டேன், ஆனா அதுவும் நல்லதாப் போச்சு. உன் மண்டையில எதுவும் இல்லைன்னு எனக்கு இன்னிக்குத்தான் க்ளியரா தெரிஞ்சது'' என்றாள் சிரித்தபடி.

''என்ன சொல்ல வர்றே நீ?''

''உன் அப்பாகிட்ட உன்னைப் பத்தி போட்டுக் கொடுத்தேன்னுதானே உனக்கு இவ்ளோ ஆத்திரம், ஏன் அப்படி செஞ்சேன்னு ஒரு நிமிஷம் யோசிச்சிருக்கியா? நான் ஏன் உன் வீட்டுக்கு அடிக்கடி வந்து நியூஸ் பேப்பரோ, வெங்காயமோ எதையாவது வாங்க வர்றேன். அந்தச் சாக்குல உன்னைப் பார்க்கத்தான்.''

அவள் சொல்வதை நம்ப முடியாமல் கேட்டுக் கொண்டிருந்தேன். அவள் சொல்லச் சொல்ல ஜிவ்வென்று எங்கேயோ பறப்பது போலிருந்தது. கால் தரையில்தான் உள்ளதா என்று சந்தேகமாக இருந்தது. குனிந்து பார்த்தேன். அங்கேதான் இருந்தது.

''ஹேய் நீ ஏன் இப்ப வெட்கப்படறே? சரி, காதலை யார் சொன்னா என்ன, ஐ லவ் யூ ராகுல். ஒரு வருஷமா உன்னை நினைச்சுத்தான் உருகிட்டு இருக்கேன். உன் மரமண்டைக்கு இப்படி புளி போட்டு விளக்கினாத்தான் புரியும்னு தெரிஞ்சிருந்தா, ஒன் இயரை வேஸ்ட் பண்ணியிருக்க மாட்டேன். அதனால் என்ன... பெட்டர் லேட் தேன் நெவர்னு ஒரு பழமொழி இருக்கு. ஆனா லவ்வைச் சொல்லிட்டேன்னு, உடனே பார்க், பீச், பிட்ஸா கார்னர், மாயாஜால்னு ப்ளான் பண்ணாதே, ஒழுங்கு மரியாதையா படி. இல்லாட்டி வழக்கம் போல, இல்ல இல்ல, அதைவிட அதிகமாவே என் மாமனார்கிட்ட போட்டுக் கொடுப்பேன். நல்லா படிச்சு, உருப்படியா செட்டில் ஆனதும்தான் கல்யாணம். சரியா? என்ன ராகுல் நானே பேசிட்டு இருக்கேன், உனக்கு என்னைப் பிடிச்சிருக்குதானே?'' என்றவளின் கண்களைப் பார்த்துச் சிரித்து, 'மிகவும் பிடித்திருக்கிறது பெண்ணே' என்று சொல்ல வாயைத் திறந்தபோது, என் செல்போன் மெதுவாக அதிர்ந்து, 'காதல் வளர்த்தேன், காதல் வளர்த்தேன், உன் மேல் நானும், உன் மேல் நானும் காதல் வளர்த்தேன்' என்று பாடியது. ●

''என்ன தலைவா... டல்லா இருக்கீங்க..?''

''போடா... முட்டாள்! பத்து ஜட்ஜை கடத்திக்கிட்டு வாடான்னா... கலா மாஸ்டர், குஷ்பு, ரம்பா, சங்கீதா, ஜீவா, ஷாம், ஸ்ரீனிவாஸ் இவங்களை எல்லாம் கடத்திக்கிட்டு வந்திருக்கியே...?''

- ஆனந்த் சீனிவாசன்



# பிரணாபைப் புகழ்கிறாரே


* எதிர்பாரா புகழ்

● தி.ரங்கசாமி,
ஸ்ரீரங்கம்

? போர்க் கப்பல்கள், நான்கு வழிச் சாலை - இவற்றை நாட்டுக்கு அர்ப்பணிப்பது என்றால் என்ன? அவ்வாறு செய்யாவிட்டால்


* தெரிவித்த வருத்தம்!

தனியாருக்குச் சொந்தமாகுமா?

! ஆகிவிடாது! ஆனால் பேப்பரில் முழுப் பக்க விளம்பரம் போட்டு விழா எடுத்து, அதன் மூலம் விளம்பரம் பெற முடியாதே!

● பி.இராஜேந்திரன்,
லோயர் அணைக்கட்டு

? சர்வ வல்லமை படைத்த அமெரிக்காவே இந்தியாவைத் தனது சிறந்த நட்பு நாடாக அறிவித்துள்ள நிலையில், ''பாகிஸ்தானைச் சீண்டினால் இந்தியாவையே அழித்துவிடுவேன்'' என்று பின்லேடன் கொக்கரித்துள்ளது எந்த அடிப்படையில்?

! பயங்கரவாதிகள் நேரடியாகப் போரிடுவதில்லை. மறைந்து ஊடுருவி, படுகொலைகளையும் சேதங்களையும் ஏற்படுத்துவர். இதற்குத் துணிச்சல் என்ன வேண்டியிருக்கிறது?

● கே.ஆர்.தேவேந்திரன்,
கொணவட்டம்

? கலைஞரின் அணுகுமுறையிலான இலங்கைத் தமிழர் பிரச்னை தி.மு.க.வுக்கு பலத்தைச் சேர்த்திருக்கிறதா? பலவீனத்தைச் சேர்த்திருக்கிறதா?

! கொள்கை அளவில் பலம்; கூட்டணி அரசியலில் பலவீனம். கொள்கையில் உறுதியாக இருந்தால், மக்களிடையே பலம் கூடும்; குறையாது.

● வைகை வளவன், மதுரை-17

? தங்கத்தின் விலை 11,000 ரூபாய்க்கும் மேலே போய்விட்டதே. பாவம், பெரும்பாலான பெண்கள் இனி முதிர் கன்னிகளாக இருக்க வேண்டியதுதானா தலைவா?


* வெற்று வீரம்

! தங்கத்தின் விலை ஏறுவது இருக்கட்டும்; 'பெண்கள் தங்கத்தோடு வந்தால்தான் திருமணம்' என்ற மனப்பான்மை உங்கள் கேள்வியில் எதிரொலிக்கிறதே! இந்த மனப்பாங்கு மாறினால்தான் தங்கத்தின் விலை உயர்வு நம்மைப் பாதிக்காமலிருக்கும்.

● பா.காளிதாசன், நீர்விளங்குளம்

? கவியரசு கண்ணதாசன், அய்யா

# அத்வானி?



* தங்க ஊசி!

## நீங்கள் கேட்டவை

## - தராசு

? அழ.வள்ளியப்பா உள்ளிட்ட 95 அறிஞர்களின் நூல்கள் தமிழக அரசினால் நாட்டுடைமையாக்கப்பட்டுள்ளது பற்றி...?

! கொஞ்சம் சந்தோஷம், கொஞ்சம் சர்ச்சை என்று இரண்டுங்கெட்டான் ரியாக்ஷன் தவிர்க்க, முன்கூட்டியே குடும்பத்தினரை அணுகி அனுமதி பெற்றிருக்கலாம்.

● வே.முருகேசன், சென்னை - 88

? கடந்த சில நாட்களாக, சென்னை சென்ட்ரல் ஜெயிலைப் பார்க்க மக்கள் கூட்டம் அலைமோதியதைக் கவனித்தீர்களா?

! ஒரு கியூரியாஸிடிதான்! ஜெயிலுக்குப் போகாமலே ஜெயிலுக்குள் புகுந்து பார்த்த திருப்தி! கொடைக்கானலில் 'தற்கொலை முனை' என்று ஓர் இடம் இருக்கிறது. அங்கே தற்கொலைகள் அபூர்வம். ஆனால், அதைப் பார்த்துத் திரும்பாத டூரிஸ்ட் கிடையாது.

● ஜி.மாரியப்பன், சின்னமனூர்

? ''பாகிஸ்தானுடன் போர் தொடுப்பதால் தீவிரவாதத்தைத் தடுத்து நிறுத்திவிட முடியாது'' என்கிறாரே பிரணாப் முகர்ஜி?



* ஆவேச வார்த்தை!

! உண்மைதான். ஆனால், பயங்கரவாதிகள் மீது பாகிஸ்தான் தீவிர நடவடிக்கை எடுக்காத பட்சத்தில், அவர்களுடைய முகாம்களைத் தாக்கும் வலிமை நமக்கு உண்டு என்பதும் பாகிஸ்தான் தலைமைக்குத் தெளிவுபடுத்தப்பட வேண்டும்.

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''இப்போதெல்லாம் முதுகில் குத்தும் அரசியல்வாதிகள் அதிகமாகிவிட்டார்கள். அதனால்தான் இந்த முதுகு வலி'' என்று கலைஞர் காரணம் கூறியுள்ளது பற்றி?

! ஜோக்காகச் சொல்லியிருந்



* வலிக்கு விளக்கம்!

தால் - ஸாரி - சிரிப்பு வரலை. சீரியஸாகக் கூறியிருந்தால், பகுத்தறிவுக்குப் பொருந்தாத இவ்வரிகளை மன (அவை)க் குறிப்புகளிலிருந்து நீக்கிவிடவும்!

● பெ.சந்திரசேகர், ஸ்ரீவில்லிபுத்தூர்

? சேது சமுத்திரத் திட்டத்தை எந்தக் கொம்பனாலேயும் தடுக்க முடியாது என்று டி.ஆர்.பாலு ஆவேசப்பட்டிருக்கிறாரே?

! உச்சநீதிமன்றத்தில் நிலுவையில்

உள்ள வழக்கின் போக்கைப் பொறுத்தது இவ்விஷயம். ஆகவே 'கொம்பன்' போன்ற வார்த்தைகளை உபயோகிப்பது ரொம்பத் தப்பு.

● உமரி.பொ.கணேசன், மும்பை-37 ★

**? கூரியர்கள் வளர்ச்சி அடைந்ததற்குத் தபால் துறையின் அலட்சியம்தானே காரணம்?**

! ஆமாம்! போட்டிக்கு ஆள் இல்லை என்கிற ஏகபோக நிலையில் அலட்சியமாக இருந்துவிட்டு, இப்போது தபால் நிலையங்களில் மருந்து-மாத்திரை தொடங்கி இன்ஷுரன்ஸ் பாலிஸி வரைக்கும் விற்பதற்கான ஏற்பாடுகள் துவங்கியிருப்பது, தும்பை விட்டு வாலைப் பிடிக்கும் கதை தான்!



★ இரண்டுங்கெட்டான்...



★ ...ரியாக்ஷன்

● அ.கஹைறல் ரஹ்மான், திருச்சி-21

**? "உறுப்பினர்களின் ஒழுங்கீன நடவடிக்கையால் பாராளுமன்ற நெறிகள் குழிதோண்டிப் புதைக்கப்பட்டன" என்று சபாநாயகர் சோம்நாத் சாட்டர்ஜி ஆவேசப் பட்டிருப்பது பற்றி?**

! அதுமட்டுமா? 'மக்களின் வரிப் பணத்திலிருந்து சல்லிக் காசு பெறத் தகுதியற்றவர்கள்' என்றுகூடக் கூறிவிட்டார். இதில் சோகம் என்னவென்றால், 'உணர்ச்சி வசப்பட்டுப் பேசிவிட்டேன்' என்று பின்னர் அவர் வருத்தம் தெரிவித்ததுதான். நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவராவது தாங்கள் அங்கு நடந்துகொள்ளும் விதத்துக்கு வருத்தம் தெரிவித்ததுண்டா?

● ஜெ.ஜெயராணி, மதுரை

**? பாகிஸ்தானைத் தாக்க இந்தியா முற்பட்டால், மும்பையில் நடந்தது போன்று மேலும் பல தாக்குதல்கள் நடக்கும் என அல் கைதா அமைப்பின் மூத்த கமாண்டர் முஸ்தஃபா அபு அல்-யாஷித் கூறியுள்ளது பற்றி...?**

! பயங்கரவாதிகளின் சொர்க்கம் பாகிஸ்தான் என்று ஒபாமா சொல்வதை நிரூபிக்கிறார்கள்.

● எஸ்.ராமசாமி, வடக்கு தமிர் பாளையம்

**? நீதிபதிகளின் அனுமதி இல்லாமல் போலீசார் கோர்ட்டுக்குள் நுழையக் கூடாதாமே? இந்நிலையில், தமக்குப் போதுமான பாதுகாப்பு தரவில்லை என்று சு.சுவாமி குறை கூறியுள்ள குற்றச்சாட்டு சரிதானா?**

! சரிதான். காவல் துறை நுழைய முடியாது எனில், அவரது பாதுகாப்புக்குப் பொறுப்பேற்கும் கடமை நீதிமன்றத்தினுடையதாகிவிடுகிறதே!

● அ.அப்துல் காதர், சென்னை-45

**? பிரணாப் முகர்ஜியை 'ஆபத்பாந்தவன்' என்று புகழ்ந்து தள்ளியிருக்கிறாரே அத்வானி?**

! பிரணாபைப் புகழ்கிற மாதிரி புகழ்ந்து, காங்கிரஸை பயங்கரமாகக் கிண்டலடித்துள்ளார். வாழைப்பழத்தில் ஏற்றிய தங்க ஊசி!

❑ ரூ.150/-பரிசு பெறுபவர் :
வே.முருகேசன், சென்னை-88

★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :
உமரி பொ.கணேசன், மும்பை-37

# கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை



## கல்கி சதாசிவம் நினைவுச் சொற்பொழிவு;
## கல்கி சதாசிவம் நினைவு விருது
## வழங்கும் விழா

- 2008ஆம் ஆண்டில் தமிழ் இதழ்களில் வெளியான கலைநயமும், சமுதாய நோக்கும் இணைந்த தலைசிறந்த விளம்பரத்துக்கான விருது வழங்குதல்,
- படிப்பில் சிறந்த, பொருளாதாரத்தில் பின்தங்கிய மாணவர்களுக்குக் கல்வி உதவித் தொகை வழங்குதல்.

*கல்கி சதாசிவம் நினைவுச் சொற்பொழிவு:*

**உருகும் உலகப் பொருளாதாரமும்**
**நலியும் நிர்வாக நெறிகளும்**

**திரு ஆர். சேஷசாயி,**

*நிர்வாக இயக்குனர், அசோக் லேலண்ட்*

நாள் : 08.03.09, ஞாயிற்றுக்கிழமை,
நேரம் : மாலை 6 மணி
இடம் : பாரதிய வித்யாபவன் அரங்கம்,
மயிலாப்பூர், சென்னை - 600 004

*அனைவரும் வருக!*



# கிருஷ்ணரும் 150 சாக்லெட்களும்!

**வெ**றும் வாயையே மெல்லும் கிரேஸிக்கு சாக்லெட்டும், கிருஷ்ணரும் அவலாகக் கிடைத்ததால் ஜாலியாகத் தயாரிக்கப்பட்ட நாடகம் சாக்லேட் கிருஷ்ணா, நூற்று ஐம்பதாவது தடவையாக மேடையேறிய நாரத கான சபா அரங்கத்தை ரசிகர்கள் ஈக்களாக மொய்த்ததில் அதிசயம் இல்லை!

பாஞ்சஜன்ய சங்கை அவ்வப்போது ஊதாமல் மகாபாரதத் தொடர் எடுக்க முடியாதது போல, ஆயிரம் வாலாக்களாக வரும் நகைச்சுவை வெடிகள் இல்லாத நாடகத்தை கிரேஸியால் அளிக்க முடியாது. 'கையிலே கிருஷ்ணனை வைத்துக் கொண்டு வெண்ணெய்க்கு அலைய வேண்டியிருக்கு!', 'கிருஷ்ணா (அன்)கான்ஷியஸ்' போன்ற பாதாம் துகள்கள் சாக்லெட் மேல் தூவப்பட்ட சில சாம்பிள்கள்.

**கா**ந்தனின் கன கம்பீர ஆங்கில-தமிழ் டெரிகாட் இணைப்புரையுடன், யமுனா கல்யாணியில் நித்யஸ்ரீ, கண்ணனைப் புகழ்ந்து இறைவணக்கம் பாட, தொடர்ந்து கிரேஸிக்கு வாழ்த்துரைகள் வழங்கியவர்கள் சபரி கே.ஆர்.வி.ரமணி, ஹிந்து ரமேஷ் ரங்கராஜன், நாரதகான சபா ஆர்.கிருஷ்ணசுவாமி மற்றும் அனுஹாஸன்.

வேஷம் கட்டியிருந்த கிரேஸிக்கு அருகில் வேஷம் கட்டாமல் கமல், கமலாகவே இருந்து எல்லோர் கவனத்தையும் காந்தமாக இழுத்தது, அவர் 'உலோக'நாயகன் என்பதால்தான். நாடக வெற்றிக்குக் காரணமான ஒவ்வொருவரையும் கிரேஸி பெயர் சொல்லிப் புகழ்ந்தது, எல்லா கோபிகையுடனும் பிருந்தாவனத்தில் சரிசமமாக உறவாடிய கண்ணனின் வாத்சல்யத்தை ஒத்திருந்தது.

மேடையில் திறக்கப்பட்ட ஹிந்து கேசவ்வின் கொழுக்மொழுக் கிருஷ்ணரின் வண்ண ஓவியம் படு அம்சம்.

''சாக்லெட்டே எனக்குக் கூடாது. டயாபடீஸ். ஆனா, கிரேஸியின் சாக்லேட்டால் கவலையில்லை'' என்று வெளியே வந்த நண்பர் ஒருவர் சிரித்துக் கொண்டே சொன்னபோது, நாடக வசூலை நன்கொடையாக்கி பலர் நோயைத் தீர்க்க உதவி வரும் மோகன் கிரேஸியாகத் தோன்றவில்லை. ●

ஜே.எஸ்.ராகவன்

# சினி சிப்ஸ்...

விஜய்யின் 50வது படத்தை ஜெயம் ராஜா இயக்கவிருப்பதாக பரபரப்பான செய்திகள் அடிபட்டுக் கொண்டிருக்கின்றன. இந்தச் செய்தி உண்மையா என்று ஜெயம் ராஜாவிடம் கேட்டால், ''விஜய்யை வைத்து படம் பண்ண வேண்டும் என்ற ஆசை எனக்கு இருக்கிறது. நானும் விஜய்யும் சந்தித்துப் பேசியதும் உண்மைதான். ஆனால் அது அவரது 50வது படமா 51வது படமா என்பது இன்னும் முடிவாக வில்லை'' என்கிறார்.

ஆயிரத்துக்கும் மேற்பட்ட நாடகங்களில் நடித்த பழம்பெரும் நாடக நடிகர் ஜி.ஆர்.ராஜூராஜன், தம் படத்தின் எல்லாக் காட்சிகளையும் ஒரே டேக்கில் நடித்ததைக் கண்ட இயக்குநர் ஷக்திசிதம்பரம் உற்சாகமாகி, ''இனி என் ஒவ்வொரு படத்திலும் ஜி.ஆருக்கு வாய்ப்பு கொடுத்து அவரை மிகப் பெரிய நடிகராக உருவாக்குவேன்'' என்று சொன்னதோடு, ''ரங்காராவ், பாலையா இருவரது கலவை யாக இருக்கிறார்'' என்றும் ஜி.ஆருக்கு மகுடம் சூட்டியிருக்கிறார்.

அரசு, சத்ரபதி ஆகிய படங்களைத் தயாரித்த ஜே.ஜே. குட் பிலிம்ஸ் பாபு ராஜாவின், 'வித்தை' என்ற படத்தில் ஜீவா கதாநாயகனாக நடிக்கிறார். இப்படத்தை, சீமானின் உதவியாளராக இருந்த கிரைவாணன் என்ற புதுமுக இயக்குநர் இயக்கு கிறார்.

சூரியன் சட்டக்கல்லூரி, அர்ஜுனன் காதலி என ஒரே நேரத்தில் இரண்டு படங்களைத் தயாரித்து வரும் சிவசக்தி பாண்டி யன், அடுத்து மற்றொரு படத்தை யும் தயாரிக்கிறார். இப்படத்துக்கு மகிழ்ச்சி என்று பெயர் சூட்டப்பட்டிருக் கிறது. மக்கள் தொலைக்காட்சியில் ஒளி பரப்பாகி மிகப் பெரிய பரபரப்பை ஏற்படுத் திய சந்தனக்காடு தொடரை இயக்கிய கௌதமன் 'மகிழ்ச்சி' படத்தை இயக்கு கிறார்.

– நியூஸ் பாய்

**"உலகத்துக்குப் பொதுவான சொல்லொன்றை உருவாக்கித் தந்திருக்கும் தேசத்திலிருந்தும் கலாசாரத்திலிருந்தும் நான் இங்கு வந்திருக்கிறேன்."**

நிசப்தத்தில் தொடங்கி ஆழமான அமைதியில் முடியும். 'ஓம்' என்பதே அச் சொல்.'' ஆரவாரமான ஆஸ்கர் மேடையில் அமைதியாக வார்த்தைகளை வெளிப்படுத்தினார் ரஸல் பூக்குட்டி. பெயரைப் போலவே பேச்சிலும் அத்தனை மென்மை.

கேரளாவில் விளக்குப்பாறா கிராமத்தில் பிறந்தவர். இன்று ஆஸ்கார் விருதின் பெருமைமிகு சொந்தக்



# நிசப்தத்தில் தொடங்கி...

காரர். கேரளாவே திருவிழாக் கோலம் பூண்டு அவரை ஒயாமல் வாழ்த்திக் கொண்டிருக்கிறது. மீடியாவிலிருந்து அவர் வீட்டுக்குப் படையெடுத்து வந்த வண்ணம் இருக்கிறார்கள். ஸ்லம் டாக் மில்லியனர் படத்துக்காகச் சிறந்த ஒலிக்கலவைக்கான ஆஸ்கர் விருதை பெற்றவர் உணர்ச்சி பொங்கச் சொல்கிறார். ''என்னால் நம்பவே முடியவில்லை. இந்த மேடையை நான் இரண்டு வித்தகர்களுடன் பகிர்ந்துகொள்கிறேன். மும்பையின் மிகச் சாதாரண சப்தங்களை உருவாக்கியவர்கள். அதன் ஆத்ம ஒலியை உள்வாங்கி ஸ்லம் டாக் மில்லியனருக்காக உயிரை உருக்கும்படியாக உருமாற்றியவர்கள்.

நான் இந்த விருதை என் தேசத்துக்குச் சமர்ப்பணம் செய்கின்றேன். நன்றி அகாதெமி. சிறந்த ஒலிக் கலவைக்கான விருதை மட்டுமல்ல, சரித்திரத்தையே என் கையில் அளித்திருக்கிறீர்கள். என்னுடைய குருமார்களான டானிபாயில், க்ரிஸ்டியன் கால்சன், பால் ரிட்சி மற்றும் இப்படத்துக்காகப் பணியாற்றிய அனைவருக்கும், க்ளென் ஃப்ரீமாண்டில் மற்றும் சவுண்ட் மிக்ஸ் செய்த அனைவருக்கும் என் உளமார்ந்த நன்றி. இவ்விருதை உங்கள் அனைவருக்கும் அர்ப்பணிக்கிறேன்'' என்றார்.

பூக்குட்டி அடுத்து ஒரு மலையாளப் படத்தை இயக்கவிருக்கிறார். இது மம்முட்டி நடிக்க, பிரபல எழுத்தாளர் ஆனந்தின் 'கோவர்தனன்டே யாத்ரகள்' எனும் கதையைத் தழுவி உருவாகும் படம்.

- சரா ஆதித்யா

